## விகாரிஸூ ஐப்பசிமீ சரத்ருது. தக்ஷிணாயனம்.

| தேதி. | இங்கிலீஷ் | வாரம் | திதி. | நா. வி. | நக்ஷ. | நா. வி. | யோ. | ஶ்ரா திதி. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 17 (1959ஞு அக்டோபர் மீ) | சனி | ப்ர. | 43-00 | அசு. | 48-00 | சி. | — |
| 2 | 18 | ஞா. | த்வி. | 48-18 | பர. | 54-37 | சி. | த்வி. |
| 3 | 19 | திங். | த்ரி. | 54-12. | க்ருத். | 60-00 | ம. | த்ரி. |
| 4 | 20 | செவ். | சது. | 60-00. | ,, | 1-47 | சி.அ. | சது. |
| 5 | 21 | புதன் | ,, | 0-30 | ரோ. | 9-17 | சி. | பஞ். |
| 6 | 22 | வியா. | பஞ். | 6-43 | மிருக. | 16-43 | ம. | ஷஷ்ட் |
| 7 | 23 | வெள். | ஷஷ்ட். | 12-33 | திரு | 23-38 | சி. | சப். |
| 8 | 24 | சனி | ஸப். | 17-27 | புன. | 29-38 | சி. | அஷ்ட் |
| 9 | 25 | ஞா. | அஷ்ட். | 21-00 | பூச. | 34-12 | சி. | — |
| 10 | 26 | திங். | நவ. | 22-50 | ஆயி. | 37-05 | சி. ம. | நவ. |
| 11 | 27 | செவ். | தச. | 22-40 | மக. | 38-00 | சி. | தச. |
| 12 | 28 | புத. | ஏகா. | 20-30 | பூர. | 37-00 | அ. | ஏ.த். |
| 13 | 29 | வியா. | த்வா. | 16-27 | உத். | 34-05 | ம. சி. | த்ர. |
| 14 | 30 | வெ. | த்ர. | 10-40 | ஹஸ். | 29-37 | அ. சி. | சசி. |
| 15 | 31 | சனி ● | சசி. | 3-25 | சித். | 23-48 | ம.அ. | அமா |
| | | | அமா. | 55-10 | | | | |
| 16 | 1 (நவம்பர் மீ) | ஞா. | ப்ர. | 46-18 | சுவா. | 17-10 | சி. | ப்ர. |
| 17 | 2 | திங். | த்வி. | 37-15 | விசா. | 10-05 | ம. சி. | த்வி. |
| 18 | 3 | செவ் | த்ரி. | 28-27 | அனு. | 3-02 | சி. | த்ரி. |
| | | | | | கேட். | 56-25 | | |
| 19 | 4 | புதன் | சது. | 20-18 | மூல. | 50-40 | ம.அ. | ச.ப. |
| 20 | 5 | வியா. | பஞ். | 13-12 | பூரா | 46-10 | சி. | ஷஷ்ட் |
| 21 | 6 | வெள். | ஷஷ்ட். | 7-27 | உத்தி. | 43-10 | சி. ம. | சப். |
| 22 | 7 | சனி | ஸப். | 3-18 | சிர. | 41-45 | சி. | அஷ்ட் |
| 23 | 8 | ஞா. | அஷ்ட் | 0-50 | அவி. | 42-05 | ம.அ. | நவ. |
| 24 | 9 | திங். | நவ. | 0-10 | சத. | 44-05 | சி. ம. | தச. |
| 25 | 10 | செவ். | தசமி | 1-03 | பூரட். | 47-25 | ம.அ. | ஏகா. |
| 26 | 11 | புதன் | ஏகா. | 3-25 | உத்தி. | 52-02 | சி. | த்வா. |
| 27 | 12 | வியா | த்வா. | 6-55 | ரேவ. | 57-35 | சி.அ. | த்ர. |
| 28 | 13 | வெள். | த்ர. | 11-27 | அசு. | 60-00 | அ. | சசி. |
| 29 | 14 | } சனி ○ | சசி. | 16-42 | ,, | 3-55 | சி. | பௌ |
| 30 | 15 | ஞா. | பௌ | 22-00 | பர. | 10-45 | சி. | ப்ர. |

3, 30உ கிருத்திகை. 12, 25உ ஏகாதசி. 13, 27உ ப்ரதோஷம். 14உ நரகசதுர்தசிஸ்நானம் (இரவில்.) 15உ அமா. (தீபாவளிபண்.)

**காலம் எல்லாவற்றையும் கபளீகரணம் செய்யும்.**

# வைதிக தர்ம வர்த்தனீ

மலர் 13
இதழ் 1

விகாரி ஹு
ஐப்பசி மீ



ஆசிரியர்: ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா



## பொருள் அடக்கம்.



வருஷ சந்தா ரூ. 5.
தனிப்ரதி 44 ந. பை.

காரியாலயம்:

வைதிக தர்ம வர்த்தனீ,
கடவாசல்,
வடகால் போஸ்ட்,
சீர்காழி வழி,
(தஞ்சை ஜில்லா.)

# பதிமூன்றாம் ஆண்டு பிறந்தது !

நமஸ்காரம் !

சர்வேச்வரனின் அருளாலும், ஸ்ரீ ஜகத்குருவின் கடாக்ஷத்தாலும், உங்களுடைய ஆதரவினாலும், ஏஜண்டுகளின் ஒத்துழைப்பாலும் நமது ''வைதிக தர்ம வர்த்தனி'' பாலாரிஷ்டம், நோய் நொடி அகன்று வளர்ந்து வருகிறது சிறிது சிரமத்துடன் ஆரம்பித்த பன்னிரண்டாமாண்டு மங்களத்துடன் முடிந்தது. பதிமூன்றாமாண்டு புலர்கிறது. குழந்தையின் முகம் மலர்கிறது. சொந்த புத்ரியைவிட தர்ம புத்ரியை குதூகலத்துடன் வரவேற்பீர்கள் ! மகிழ்விப்பீர்கள் ! ஆதரிப்பீர்கள் ! ஒவ்வொருவரையும் ப்ரத்யேகமாக அவரவருக் கேற்ற லீலையால் மகிழ்விக்கும் இதை வரவேற்காதார் யார் தான் இருக்க முடியும் !

இச்சமயம், பதினோராண்டுகள் வளர்த்துக் கொடுத்த நம் நேமம் சி. சுப்ரமண்யனை மறப்பது நன்றன்று ! நன்றி செலுத்த ஏதேதோ சிந்தித்தோம்! நாம் எல்லோரும் சேர்ந்து ஆசீர்வதிப்பதற்கு ஸமமான வேறொரு உத்தம ஸன்மானமில்லை என முடிவிற்கு வந்தோம். இது வரை வேறெவரும் செய்யாத பணி பதினெட்டு புராண பிரசுரம் ! மூன்று மாமாங்கமாக ஸ்ரீ மடத்தில் ஷை புராணம் நடந்தது. ஹேமலம்பி ஆடி பதினெட்டாம் பெருக்கன்று எல்லாம் பதினெட்டு பதினெட்டாக ஸ்ரீ பரமாசார்யாளிடம் ஸமர்பித்து அரங்கேற்றம் நடந்தது. சிறிய தர்மத்திற்கெல்லாம் பெரிய ஸன்மானம் செய்யும் ஸ்வபாவம் பரமாசார்யாளுக்கு. இச்சமயம் ஏதாவது ஒரு ஸன்மானம் வரும் என எம்மிடம் அபிமானமுள்ள பலர் கருதினர். ஸன்மானம் செய்தால் செய்த தர்மத்தைப் பயனற்றதாக்குவதாகும் என்று கூறாமல், கூறி அருள்மாத்ரம் புரிந்தார்கள்.

அதேபோல், வைதிக தர்ம வர்த்தனிக்காக உழைத்தவர் மேல் மேலும் அரோக த்ருடகாத்ரராக தர்மத்திற் குழைக்கும்படி இறைவன் அருள்புரிய வேண்டுவோம். எப்படியானாலும் ''சிஷ்யனே உனக்கு ஸமயத்தில் உதவுவான்'' என ஸ்ரீ ஜகத்குருவின் அருள்.

கூடியவரை எல்லா வகுப்பாருக்கும் அவசியம் வேண்டிய, திருப்தி கரமான விஷயங்களை அளிக்கிறோம். பத்ரிகையின் விருத்திக்கேற்ற வகையில் நண்பர்களின் நல்லுபதேசத்தை வரவேற்கிறோம். ஒவ்வொருவரும் '' நம்முடையது இது '' என்ற எண்ணத்துடன் வேண்டுவன செய்தால் பக்ஷப் பத்ரிகையாகவோ அல்லது நூற்றுக்கணக்கான பக்கமுள்ளதாகவோ செய்யலாம். நாமும் தயங்கமாட்டோம்.

எல்லோருக்கும் ருசிகரமான விஷயங்கள் பல வெளிவரும். இனி எதையும் நாம் தனி புத்தகமாக வெளியிட விரும்பவில்லை. ஆதலால் அனைவரும் தவராமல் காபிகளைச் சேர்த்து பைண்ட் செய்துகொள்வது நலம். கல்கி புராணம் பூர்ணமாக அச்சில் வரவில்லை. அச்சான சிறிய பாகம்இவ்வாண்டின் இடையிலேயேபூர்த்தியானால்மற்றோர் உபபுராணமான ஆதித்ய அல்லது ஸாம்ப புராணம் வரும். வாசகர் கூறும் வாழ்த்தும் புகழும் இதை வளர்க்கும் சந்தாதாரரையேசார்ந்ததாகும்.

கேட்பதற்கு முன்பே தமது சந்தாவை அனுப்பும் சிலர் ஊட்டும் உத்ஸாஹமே நமக்குப் பூர்ண பலமாகும். சென்ற மாதம் வேண்டியபடி சந்தாதாரர்கள் பலர் அவர்களுடைய பத்ரிகை என்றே நண்பர்களை சந்தாதாரராகச் சேர்த்தும், ஏஜண்டுகள் '' நம் பத்ரிகைக்கு வாசகர்களை அதிகம் சேர்த்திருக்கிறோம். கூட கொஞ்சம் காபி அனுப்புங்கள் '' என்று அவர்கள் எழுதிய கடிதமும் எங்களை சந்தோஷப்

---

***சில சொற்களை உரு தெரியாமல் மாற்றும்.***

படுத்துகின்றது. இதுவே நமது பத்ரிகையின் வளர்ச்சிக்கு ஓர் அறிகுறி. அவர்களுக்குத் தனியாக நன்றி கூறுவ்து நம் கடமை யாகும்.

வீட்டிற்கு மாதாந்தர சாமான் வாங்குவதுபோல் சம்பளம் வாங்கிய வுடனேயே தர்மச் செலவு ரூ. 5/- என கணக்கொழுதி சந்தாவை அனுப்புங்கள்! தர்மஸ்வம் இது! தாமதமின்றி தயை செய்து உடனே அனுப்புக!

ஒவ்வொரு மாதமும் முகமலர்ச்சியுடன் இதை வரவேற்று கடாக்ஷிக்கும் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளின் திருவடிகளுக்கு வந்தனம் செய்து 13 வது ஆண்டு முதல் இதழையும் ஸமர்ப்பிக்கிறோம். மேன்மேலும் ஸ்ரீ அவர்களின் அருளால் வைதிக தர்மவர்த்தனீ ஓங்கி வளர்ந்து விளங்குக.

ஸ்ரீ ஜகத்குருவின் படமளித்த சென்னை பி. ஜி. பால் & கம்பெனி தலைவர் அவர்களுக்கு நன்றி தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

ஸ்வஸ்தி ப்ரஜாப்ய: பரிபால யந்தாம்
ந்யாய்யேந மார்கேண மஹீம் மஹீசா: |
கோப்ராம்மணேப்ய: சுபமஸ்து நித்யம்
லோகாஸ்ஸமஸ்தா: ஸுகிநோபவந்து ||

ஆசிரியர்.

---

## மாஸ விசேஷம்.

சரத்ருது துலாமாஸம் சரத்காலத்தில் செய்வதாலும், சாரதா தேவியை நாடி செய்வதாலும், சாரதா நவராத்ரி என ப்ரஸித்தமானது. காவேரி ஸ்நாநம் மிக விசேஷமான புண்யம் தரும். காவேரீ புராண ச்ரவணம் முக்யமானது. இம்மாதம் பருப்புகளை உண்ணக் கூடாது. ஆகாச தீபம் ஏற்றவேண்டும். [காவேரி பூஜை புஸ்தகம்: விலை தபால் சிலவுடன் 20 காசு. மாம்பலம் குருகுல வெளியீடு.]

**கிருஷ்ண த்வாதசி, கோவத்ஸ த்வாதசி:** அன்று கன்றுடன் கோபூஜை செய்து பசும் பால், தயிர், நெய் சாப்பிடக் கூடாது. கிருஷ்ண பக்ஷ த்வாதசிமுதல் 5 நாள் தேவ, ப்ராம்மண, கோ, ஜ்யேஷ்டன், தாய் முதலியவர்களுக்கு நீராஜனம் செய்யவேண்டும். **நரக சதுர்தசியில்** அப்யங்கன ஸ்நானம் கங்கா ஸ்நான பலனைத் தரும். அன்றே நிறைய தீபங்களை ஏற்றி தீபாவளி செய்யவேண்டும். அமாவாஸ்யையில் லக்ஷ்மீபூஜை செய்யவேண்டும். வடதேசத்தவர் லக்ஷ்மீ பூஜை செய்து புதுக்கணக்கு போடுவது அன்றே. அன்றிரவு ஸ்த்ரீகள் முறத்தினால் மூதேவியை வீட்டைவிட்டு அடித்துத் துறத்தவேண்டும். **யமத்விதீயை** அன்று யமனைப் பூஜித்து யமுநா ஸ்நானம் செய்து ஸஹோதரியை பூஜித்தால் யமயாதனை இராது.

**19௳ ஸ்கந்த ஷஷ்டி பூஜை:** ஸ்கந்த ஸஹஸ்ரநாமார்ச்சனை ஷெ பூஜாவிதி இரண்டும் ரூ. 1. வி. பி. 64 காசு. [இதை வாங்குவோருக்கு அழகான படத்துடன் முருகன் பெருமை என்ற 56 பக்கமுள்ள புத்தகம் இலவசம்.]

**24௳ ஸ்ரீ யாக்ஞவல்க்ய ஜயந்தி.**

**26௳ ப்ருந்தாவந த்வாதசி** [துளஸீசரிதம், பூஜை, விவாஹம் 4அணா. தபால் 8 காசு.] **28௳ அன்னாபிஷேகம்.**

---

*செயலை நீக்கி சொல் மாத்ரம் இருக்கச் செய்யும்.*



ஸ்ரீ ஜகத்குரு காஞ்சி காமகோடி பீடாதிபதிகள்
ஸ்ரீ சந்த்ர சேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகளும்

# கணேச ஹோமம்.



ஆசமனம் செய்து அக்ஷதையைக் கையில் எடுத்துக் கொண்டு

**ॐ शुक्लाम्बरधरं विष्णुं शशिवर्णं चतुर्भुजम् ।**
**प्रसन्नवदनं ध्यायेत् सर्वविघ्नोपशान्तये ॥**

*ஶுக்லாம் பரதரம் விஷ்ணும் ஶஶிவர்ணம் சதுர்புஜம் ।*
*ப்ரஸன்னவதனம் த்யாயேத் ஸர்வவிக்னோப ஶாந்தயே ॥*

*(ப்ராணாயாமம் செய்தல் வேண்டும்.)*

**ॐ भूः । ओं भुवः । ओं सुवः । ओं महः । ओं जनः । ओं तपः । ओं सत्यम् । ओं तत्सवितुर्वरेण्यम् । भर्गो देवस्य धीमहि । धियोयोनः प्रचोदयात् ओमापो ज्योतीरसोऽमृतं ब्रह्म भूर्भुवस्सुवरोम् ॥**

*ஓம் பூ: ஓம் புவ: ஓம் ஸுவ: ஓம் மஹ: ஓம் ஜன: ஓம் தப: ஓம் ஸத்யம் ஓம் தத்ஸவிதுர்வரேண்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி தியோயோன:ப்ரசோதயாத் ॥ ஓமாபோ ஜ்யோதீ ரஸோऽம்ருதம் ப்ருஹ்ம பூர்புவஸ்ஸுவரோம்.*

**ममोपात्त समस्त दुरितक्षयद्वारा श्री परमेश्वर प्रीत्यर्थं तदेव लग्नं सुदिनं तदेव ताराबलं चन्द्रबलं तदेव । विद्याबलं दैवबलं तदेव लक्ष्मीपते ते ऽङ्घ्रियुगं स्मरामि ॥**

*மமோபாத்த ஸமஸ்த துரிதக்ஷயத்வாரா ஸ்ரீ பரமேஶ்வர ப்ரீத்யர்த்தம் ததேவலக்னம் ஸுதினம் ததேவ தாரா பலம் சந்த்ரபலம் ததேவ வித்யாபலம் தைவபலம் ததேவ லக்ஷ்மீபதே தே அங்க்ரியுகம் ஸ்மராமி.*

**शुभे शोभने मुहूर्तेऽद्यब्रह्मणः द्वितीयपरार्धे श्वेतवराहकल्पे वैवस्वतमन्वन्तरे अष्टाविंशतितमे कलियुगे प्रथमेपादे जम्बूद्वीपे भारतवर्षे भरतखण्डे मेरोः दक्षिणेपार्श्वे शकाब्दे अस्मिन् वर्तमाने व्यावहारिके प्रभवादि षष्टि संवत्सराणां मध्ये.......नाम संवत्सरे ......अयने........ऋतौ.........मासे.........पक्षे......शुभतिथौ**

---

*அத்தகைய சொற்களில் சிலவற்றைக் காணலாம்.*

.........वासर युक्तायां...........नक्षत्रयुक्तायां शुभयोग शुभकरण एवंगुण विशेषण विशिष्टायां अस्यां.......शुभतिथौ अस्माकं सकुटुम्बानां क्षेमस्थैर्य वीर्यविजय आयुरारोग्य ऐश्वर्याणामभिवृद्ध्यर्थं धर्मार्थ काममोक्ष चतुर्विधफल पुरुषार्थ सिध्यर्थं इष्टकाम्यार्थ सिध्यर्थं समस्त मङ्गळावाप्त्यर्थं समस्तदुरितोप शान्त्यर्थं (विशेषतः)....... राशौजातस्य...........शर्मणः...........यजमानस्य (मम) महागणपति प्रसाद सिध्यर्थं इष्टकाम्यार्थ सिध्यर्थं (कृष्यभिवृद्ध्यर्थं) धनधान्य समृध्यर्थं सर्वकार्यानुकूल्य सिध्यर्थं सर्वत्र विजय सिध्यर्थं सकल बाधानिवृत्यर्थं अचञ्चल निष्कपटभक्ति सिध्यर्थं दीर्घायुष्य सिध्यर्थं नालिकेरादिद्रव्यैः महागणपति होमं करिष्ये (द्विः)

ஶுபே ஶோபனே முஹூர்த்தே ஆத்ய ப்ரஹ்மண: த்விதிய பரார்த்தே ஶ்வேத வராஹ கல்பே வைவஸ்வத மன்வந்தரே அஷ்டாவிம்ஶதிதமே கலியுகே ப்ரதமேபாதே ஜம்பூத்விபே பாரத வர்ஷே பரதகண்டே மேரோ: தக்ஷிணே பார்ஶ்வே ஶகாப்தே அஸ்மின் வர்த்தமானே வ்யவஹாரிகே ப்ரபவாதி ஷஷ்டி ஸம்வத்ஸராணாம் மத்யே ..........நாம ஸம்வத்ஸரே......அயனே.......ருதௌ......... மாஸே......பக்ஷே.....ஶுபதிதௌ.......வாஸரயுக்தாயாம்..... நக்ஷத்ர யுக்தாயாம் ஶுபயோக ஶுபகரண ஏவங்குண விஶேஷண விஶிஷ்டாயாம் அஸ்யாம்.......ஶுபதிதௌ அஸ்மாகம் ஸகுடும்பானாம், க்ஷேமஸ்தைர்ய வீர்யவிஜய ஆயுராரோக்ய ஐஶ்வர்யாணாம் அபிவ்ருத்யர்த்தம் தர்மார்த்த காம மோக்ஷ சதுர்வித பல புருஷார்த்த ஸித்யர்த்தம் இஷ்டகாம்யார்த்த ஸித்யர்த்தம் ஸமஸ்த மங்களா வாப்த்யர்த்தம் ஸமஸ்த துரிதோப ஶாந்த்யர்த்தம் (விஶேஷத:) .........ராஶௌ ஜாதஸ்ய .........ஶர்மண: அஸ்ய, யஜமானஸ்ய (மம) மஹா கணபதி ப்ரஸாத ஸித்யர்த்தம் க்ருஷ்யபி வ்ருத்யர்த்தம் தன தான்ய ஸம்ருத்யர்த்தம் ஸர்வ கார்யானுகூல்ய ஸித்யர்த்தம் ஸர்வத்ர விஜய ஸித்யர்த்தம் ஸகல ப³ாத⁴ாநிவிருத்யர்த்தம் அசஞ்சல நிஷ்கபட பக்தி ஸித்யர்த்தம் தீர்காயுஷ்யஸித்யர்த்தம் நாலிகேராதி த்ரவ்யை: மஹா கணபதி ஹோமம் கரிஷ்யே ॥

आदौ महागणपति पूजां करिष्ये ॥ कलशपूजां च करिष्ये ॥ कलशं गन्धादिभिः अभ्यर्च्य ॥

---

உம்மாச்சி - உமாசிவன் என்றசொல் இப்படியானது.

ஆதௌ மஹா கணபதி பூஜாம் கரிஷ்யே । கலஶ பூஜாம் ச கரிஷ்யே ॥

பஞ்சபாத்ரத்திற்கு நாற்புறத்திலும் சந்தனமிட்டு தீர்த்தத்தில் புஷ்பத்தைப் போட்டு மூடிக்கொண்டு

कलशस्य मुखे विष्णुः कण्ठे रुद्रः समाश्रितः ।
मूले तत्रस्थितो ब्रह्मा मध्ये मातृगणास्स्मृताः ॥
कुक्षौ तु सागरास्सर्वे सप्तद्वीपा वसुन्धरा ।
ऋग्वेदोऽथ यजुर्वेदः सामवेदोऽप्यथर्वणः ॥
अङ्गैश्च सहिताः सर्वे कलशाम्बु समाश्रिताः ।
आयान्तु देवपूजार्थं दुरितक्षयकारकाः ॥

கலஶஸ்யமுகே விஷ்ணு: கண்டே ருத்ரஸ்ஸமாஶ்ரித: ।
மூலேதத்ரஸ்திதோ ப்ரஹ்மா மத்யே மாத்ருகணாஸ்ம்ருதா: ॥
குக்ஷௌ து ஸாகராஸ்ஸர்வே ஸப்தத்வீபா வஸுந்தரா ।
ருக்வேதோத யஜுர்வேத: ஸாமவேதோப் யதர்வண: ॥
அங்கைஶ்ச ஸஹிதாஸ்ஸர்வே கலஶாம்பு ஸமாஶ்ரிதா: ।
ஆயாந்து (கணபதி) தேவபூஜார்த்தம் துரிதக்ஷயகாரகா: ॥

गङ्गे च यमुने चैव गोदावरि सरस्वति ।
नर्मदे सिन्धुकावेरि तीर्थेऽस्मिन् सन्निधिं कुरु ॥

கங்கேச யமுனேசைவ கோதாவரி ஸரஸ்வதி ।
நர்மதே ஸிந்துகாவேரி தீர்தேஸ்மின் ஸந்நிதிம் குரு ॥

என்று சொல்லி கலச தீர்த்தத்தால் பூஜாத்ரவ்யங்களை ப்ரோக்ஷித்து தேவனையும் தன்னையும் ப்ரோக்ஷித்துக்கொள்ளவும்.

## அக்நி ப்ரதிஷ்டை.

ஹோமம் செய்வதற்காகப் போட்டிருக்கும் மணலின் மீது தெற்கே ஆரம்பித்து மேற்கேயிருந்து கிழக்காக முடிக்கும்படியாய் மூன்று கோடுகள் இழுத்து தெற்கே ஆரம்பித்து மேற்குப் புறமாக முதலில் வடக்கு மூடிய மூன்று கோடு போட்டு நடுவில் ஒரு ஸமித்தை வைத்து ப்ரோக்ஷித்து அந்த ஸமித்தை எடுத்து தென்மேற்கே எறிந்துவிட்டு ப்ராக்தோயம்-கிழக்கே ஜலம் வைத்து அக்நியைவைத்து ஒரு ஸமித்தைவைத்து நன்றாக எரியும்படிச் (ஜ்வாலையாகும்படி) செய்து கணபதி மூலமந்த்ர ஜபம் செய்யவேண்டும்.

---

சாதம் — ஸ்வாமிக்கு நிவேதநம் செய்த பிரஸாதம்.

अस्य श्री महा गणपति मूलमन्त्रस्य गणक ऋषिः । अनुष्टुप् छन्दः महागणपतिर्देवता ॥ गां बीजं । गीं शक्तिः । गूं कीलकम् महा गणपति जपे विनियोगः ॥

*அஸ்ய ஸ்ரீ மஹா க$^3$ணபதி மூலமந்த்ரஸ்ய க$^3$ணக ரிஷி: । அநுஷ்டுப்ச$^2$ந்த: மஹா கணபதிர்தே$^3$வதா ॥ க$^3$ாம் பீ$^3$ஜம் । கீ$^3$ம் ஶக்தி: । கூ$^3$ம் கீலகம் மஹா கணபதி ஜபே விநியோக$^3$: ॥*

गां अङ्गुष्ठाभ्यां नमः । गीं तर्जनीभ्यां नमः । गूँ मध्यमाभ्यां नमः । गैं अनामिकाभ्यां नमः । गौं कनिष्ठिकाभ्यां नमः । गः करतल करपृष्ठाभ्यां नमः ॥ (करन्यासः)

*க$^3$ாம் அங்குஷ்டாப$^4$யாம் நம: । கீ$^3$ம் தர்ஜநீப்யாம் நம: । கூ$^3$ம் மத்$^4$யமாப்$^4$யாம் நம: । கை$^3$ம் அநாமிகாப்$^4$யாம் நம: । கெ$^3$ளம் கநிஷ்டிகாப்யாம் நம: । க$^3$: கரதல கரப்ருஷ்டாப்$^3$யாம் நம: ॥ (**கரந்யாஸம்.**)*

गां हृदयाय नमः । गीं शिरसे स्वाहा । गूँ शिखायै वषट् । गैं कवचाय हुं । गौं नेत्रत्रयाय वौषट् । गः अस्त्रायफट् ॥ ॐ भूर्भुवस्सुवरोमिति दिग्बन्धः ॥ (अंगन्यासः)

*க$^3$ாம் ஹ்ருதயாய நம: । கீ$^3$ம் ஶிரஸே ஸ்வாஹா । கூ$^3$ம் ஶிக$^2$ாயை வஷட் । கை$^3$ம் கவசாய ஹூம் । கெ$^3$ளம் நேத்ரத்ரயாய வெளஷட் । க$^3$: அஸ்த்ராயப$^2$ட் ॥ ஓம் பூ$^4$ர் பு$^4$வஸ்ஸுவரோமிதி தி$^3$க்$^3$ப$^3$ந்த: ॥ (**அங்கந்யாஸம்.**)*

ध्यानम् :- वीजापूरगदेक्षु कार्मुकरुजा चक्राब्ज पाशोत्पल
व्रीह्यग्र स्वविषाण रत्नकलश प्रोद्यत्कराम्भोरुहः ।
ध्येयो वल्लभया सपद्मकरया श्लिष्टोज्ज्वलद्भूषया
विश्वोत्पत्ति विपत्ति संस्थितकरः विघ्नश्वरोऽभीष्टदः ॥

**த்யாநம் :—**

*பீ$^3$ஜாபூரகதேக்ஷு கார்முகருஜா சக்ராப்$^3$ஜ பாஶோத்பல ।*
***வ்ரீஹ்யக்$^3$ர ஸ்வவிஷாண ரத்நகலஶ ப்ரோத்யத்கராம்போருஹ:***
***த்$^4$யேயோ வல்லப$^4$யாஸபத்$^4$மகரயா ஶ்லிஷ்டோஜ்ஜ்வலத்$^3$பூ$^4$ஷயா***
***விஶ்வோத்பத்தி விபத்தி ஸம்ஸ்திதகர: விக்நேஶ்வரோ அபீஷ்டத:***

---

**ஸ்வாமி நிவேதநம் என்பதைப் பலர் மறந்தனர்.**

# ஐதரேய உபநிஷத்.

N. B :— பத்து உபநிஷத்துகளையும் அனைவர்க்கும் புரியும்படி சுருக்கமாக எளிய நடையில் வெளியிடக்கருதுவதால் தைத்திரீய உபநிஷத்துபோல் ப்ரதிபத அர்த்தமோ ப்ரதிமந்த்ர அர்த்தமோ எழுதாமல் ஐதரேயம் முதலியவைகளை சுருக்கமாகவே வெளியிடுகிறோம்.

இது ருக்வேதத்தின் உபநிஷத்து. ஆகையால் 'वाङ्मेय नसि' என்கிற மந்த்ரமே இதற்கு சாந்தி பாடம். இது மூன்று அத்யாயமாக அமைந்துள்ளது. முதல் அத்யாயத்தில் மூன்று கண்டமும் இரண்டு, மூன்றில் ஒவ்வொரு கண்டமும் உள்ளது. [இதற்கு விஸிஷ்டாத்வைத பாஷ்யம் கிடையாது.]

ஆத்மா ஒன்றே முதலில் இருந்தது. வேறு ஒரு வஸ்துவும் கிடையாது. அது உலகைப் படைக்கவேண்டுமென்று நினைத்துப் படைத்தது. ஜலம், ஆகாஸம், பூமி, இந்த லோகம் முதலியவற்றைப் படைத்தது. சில லோகங்கள் தேவலோகத்திற்கு மேலே இருக்கின்றன. அவை மஹ: ஜன: தப: ஸத்யம் எனப்படும். அவைகளுக்கு த்யுலோகம் ஆஸ்ரயமாம். அந்த ப்ரஹ்மம் உலகத்தையும், உலகில் உள்ளவரையும் காக்கக் கருதி ஜலத்திலிருந்து புருஷ வடிவமாக ஒன்றை எடுத்து இதனால் பஞ்ச பூதங்களும் ஒன்றோடொன்று சேரும்படியாகவும் செய்தது.

அந்த விராட் புருஷனுக்கு அண்டம்போல் ஒரு முகம் தோன்றி அதிலிருந்து வாக்கும், வாக்குக்குத் தேவதையான அக்நியும், மூக்கும், நாஸிகேந்த்ரியமும், அதற்கு அதி தேவதையான வாயுவும், கண்களும், நேத்ரேந்த்ரியமும், அதற்கு அதிஷ்டான தேவதையான ஸூர்யனும், காதும், ஸ்ரோத்ரேந்த்ரியமும், அதற்கு அதிஷ்டான தேவதையான திக் தேவதைகளும், தோலும், அதனின்று ரோமாக்களும், அவைகளுக்கு அதிஷ்டான தேவதையான செடி கொடிகளும் உண்டாயின. பிறகு ஹ்ருதயமும், அதிலிருந்து மனமும், அதன் அதிஷ்டான தேவதையான சந்த்ரனும், நாபியும், அதிலிருந்து அபானமும், அதன் தேவதையான ம்ருத்யுவும், புருஷனது ஸிஸ்னமும், அதிலிருந்து ரேதஸ்ஸும் அதற்கு அதிஷ்டான தேவதையான ஜலமும் தோன்றின.

அவைகள் ஸம்ஸார ஸாகரத்தில் விழுந்து அந்தப் புருஷனை பசிதாஹங்களோடுகூடி நாங்கள் எங்கே இருந்து புசிப்போம்? எங்களுக்கு இடத்தைக் கொடுங்களென்று சூக்ஷ்ம சரீரம் வாய்ந்த அவைகள் காரண புருஷரைக் கேட்டன. அவர் குதிரை சரீரம், பசு சரீரம் இவைகளைக் காட்டினர். அவைகள் போதுமானதல்ல, எனக் கூறிய பொழுது மானிட சரீரத்தைக் காண்பித்தார். அவைகள் இது நன்ருக இருக்கின்றது என்று அதில் நுழைந்தன.

மனுஷ்ய சரீரம் பலவகை ஸௌகர்யமுள்ளது. ஆன தால் அது ஸுக்ருதம் எனப்படுகிறது. தலைவன் உத்தரவுப் படி ஸேனைகள் நகரத்தில் நுழைவதுபோல் இந்த்ரியங் களும் இந்த்ரிய தேவதைகளும் மனுஷ்ய சரீரத்தில் புகுந் தன. பசி தாகமிரண்டும் எங்களுக்கு இடம் வேண்டுமென புருஷனை ப்ரார்த்தித்தன. வ்யஷ்டி எனப்படும் தனிப்பட்ட மனிதனின் உடலிலும் ஸமஷ்டியான விராட் சரீரத்திலும் உங்களுக்கு இடம் தருகிறேன் என்ருர் புருஷன்.

அதனுல் இந்த்ரியங்கள் விஷயங்களில் சென்று பசி தாகத்தைத் தீர்த்துக்கொள்ளுகின்றன. தேவதைகள் மானி டன் அளிக்கும் ஹவிஸ்ஸினுல் பசியைத் தீர்த்துக்கொள்ளு கிருர்கள். மனிதர் உண்ணும்படியான தான்யாதிகளும் ஜலத்தின் மூலமாக உண்டுபண்ணப்பட்டன. அந்த அன்ன மானது இவர்களிடம் அகப்படாமல் பராங்முகமாக ஓட ஆரம்பித்தது. அதைப்பிடித்து இழுத்துவர இந்த்ரியங்கள் ப்ரயத்னம் செய்தும் அவைகளாலதை க்ரஹிக்க முடிய வில்லை.

காரிய ரூபமான ஜகத்தானது காரண ரூபியான ஜீவனில்லாமல் ஒரு கார்யமும் செய்ய முடியாது என எண்ணி ஆன்ம சக்தியை மனிதனிடம் செலுத்தி அதன் மூலமாக இந்த்ரியங்களில் செலுத்தினர். அப்பொழுது அவை ஆஹாரத்தை இழுக்கும் சக்தி உள்ளவைகளாக ஆயின. ஜீவன் தனக்கு இந்த சக்தியை அளித்தது ஆத்மா என உணர்ந்தான். அந்த ஆத்மா எனும் ப்ரஹ்மமே சிறந்த சக்தி வாய்ந்ததால் சக்தி எனப்படுகிறது.

இந்த ஜீவன் முதலில் புருஷனுடைய கர்ப்பத்தில் செல்லுகிறது. ரேதஸ் வடிவமாக இருந்து புருஷனை விட்டு ஸ்த்ரீயினிடத்தில் செல்லும்பொழுது முதல் ஜன்மா எனப் படுகிறது அதற்கு.

---

**உண்பதற்குமுன் அக்ரபாகம் எடுத்து வைப்பதுவழக்கம்.**

தன்னிடம்வந்த அந்தரேதஸ்ஸைத் தன்னைப்போலவே எண்ணி ஸ்த்ரீ பரிபாலிக்கிருள். தன்னிடமிருந்துண்டான தனது ரூபமான ரேதஸ்ஸை ஸ்த்ரீ ரக்ஷிப்பதால் தன்னையே ரக்ஷிப்பதுபோல் எண்ணி கர்ப்பிணியை புருஷன் ரக்ஷிக்கிருன். அவளுக்கு இஷ்டமானதைத் தருகிருன்.

அந்தக் குழந்தை பிறந்தபிறகும் அதற்குத் தந்தை ஜாதகர்மா முதலிய ஸம்ஸ்காரங்களைச் செய்கிருன். தாயின் வயிற்றிலிருந்து வெளிவருவது ஜீவனுக்கு இரண்டாவது பிறவி. தந்தை மைந்தன் என்ற இரண்டு அம்சம் உள்ளவன் முன்னேருக்கு ப்ரதிநிதியாக புண்ய கர்மங்களைச் செய்யவேண்டும். இங்ஙனம் கிடைத்த உடலால் செய்யவேண்டிய கர்மாக்களைச் செய்து கிழத்தன்மையும் பெற்று இறக்கிருன். இவ்வுலகிலிருந்து புறப்பட்டு சுவர்க்க நரகத்தில் புண்ய பாபங்களுக்கேற்ற பலன்களை அனுபவிப்பதற்காக ஒரு உடலை எடுக்கிருர். அது மூன்ரும் பிறவி.

இத்தகைய பிறப்பு இறப்பினலுண்டாகும் ஸம்ஸார துக்கம் தத்வ ஞானத்தினல்தான் போகுமென ஞானிகள் கூறுகிருர்கள்.

கர்ப்பத்திலிருக்கும்பொழுதே நான் அக்னி முதலிய தேவர்களுடைய உற்பத்தியை அறிந்தேன். பிறகு என்னை இரும்பு விலங்குகள்போன்ற உடல்கள் சிறையில் அடைப்பட்டவனைப்போல் தடுத்தும் தத்வஞானத்தால் அவைகளை உதறித் தள்ளிவிட்டு வெளிப்பட்டேன் என்று இப்படி அறிந்த வாமதேவர் ஸம்ஸார பந்தங்களை உதறித்தள்ளி இந்த்ரியங்களுக்கு எட்டாத ஆத்மஸ்வரூபத்திலீடுபட்டு ஸகல போகங்களையுமனுபவித்து மோக்ஷமடைந்தார்.

ஆத்மா என்று நம்மால் உபாஸிக்கப்படுவது எது என பிரம்ம க்ஞானிகள் விசாரம் செய்தனர். வாமதேவர் எந்த ஆன்மாவை அறிந்து அடைந்தாரோ அதையே நாம் அடையவேண்டுமென்று விசாரித்தனர். எதனல் ரூபத்தைப் பார்க்கிரேம், சப்தத்தைக் கேழ்க்கிரேம், எதனல் பேசுகிரேம். எதனல் முகருகிரேம், எதனல் ருசியுள்ளது ருசியில்லாதது என்பதை அறிகிரேம் என விசாரித்து ஹ்ருதயம், மனஸ் எனப்படும் கரணமொன்றே கண்ணையிருந்து பார்க்கின்றது. காதாயிருந்து கேழ்க்கின்றது.

---

தெவசம் – பெரியோர் இறந்த திவஸம், திதி என்பர்.

மற்ற புலன்களாக இருந்து ஒவ்வொன்றையும் அறிகிறது என்ற முடிவிற்கு வந்தனர்.

இம்மனதிற்கும் அறிவை ஊட்டும்வஸ்துவே ஆத்மா என முடிவு செய்தனர். அந்த:கரண வ்ருத்தியே ஸம்ஞானம். விசேஷமான ஆஞானம் தெளிவானஞானம் ஸமயத்திற்கு ஏற்றபடி தோன்றும் ப்ரக்ஞானம் க்ரந்தங்களை தரிக்கும் சக்தியான மேதை கண் மூலமாக விஷயங்களைக்காண்பது, இந்த்ரியங்களைத் தரிக்கும் த்ரிதி. ஆலோசிக்கும் மதி, அதில் ஸ்வதந்த்ரமான நிலையான மனீஷை, ரோகம் முதலியவை உண்டாகும் போது நேரும் கஷ்டம் முன் நடந்தவைகளை நினைத்தலெனும் ஸ்ம்ருதி; இதைச் செய்வதென உறுதிக்கொள்ளும் ஸங்கல்பம் முதலியவைகளெல்லாம் அந்த:கரண வ்யாபாரங்களே ஆகும். இவைகளில் ஸம்பந்தப்பட்டும் ஸம்பந்தபடாமலும் இருப்பது ஆத்மா.

அந்த பரப்ரஹ்மமே ப்ரஹ்மா இந்திரன் முதலிய தேவர்களும் பஞ்ச பூதங்களும் அல்ப ஜந்துக்களும் நால்வகை பிராணிகளும் அசையும் பொருளும் அசையா பொருளுமாம். எல்லா ப்ரக்ஞானத்திலேயே ப்ரதிஷ்டையாய் இருக்கின்றன. ஆதலால் ப்ரஞானம் ப்ரஹ்மா. இது ஓர் மஹாவாக்யமாகும்.

இந்த ப்ரக்ஞானத்தை ஆத்மாவாக அறிந்து வாமதேவர்போல் உபாஸிப்பவர் பேத ஞானத்தை விட்டு ஆத்மாவாக ஆவார்.

**ஐதரேயம் முற்றிற்று.**

---

## புத்தக விமர்சனம்.

குருகுல வெளியீட்டின் மலிவு விலைகள் 12–10–59துடன் பூர்த்தி. மற்றும் சிவராத்ரி, வேதவேதாங்கம், ஸௌபாக்ய அஷ்டோத்தரம், தேவீ பாகவதம், புவநேச்வரீ த்ரிசதீ முதலியன ஆகிவிட்டன. இதர புஸ்தகங்கள் 13—10—59 முதல் பழய விலையே.

**மாம்பலம் குருகுல வெளியீடு :**

1. ஸ்ரீவிநாயக புராணம் (தனியாக உள்ளது) விலை ரூ. 2—50
2. ஸாம, ருக்வேத ஸந்த்யா வந்தனம், (தனியாக உள்ளது) ... ... விலை 75 ந.பை.

இரண்டிற்கும் தபால் சார்ஜ் தனி.

**சக்தி சச்சிதாநந்த சங்கம், தென்னூர்–திருச்சி :** இச் சங்கத்தார் பல அன்பு வெளியீடுகளை அச்சிட்டு இலவசமாக வழங்கி வருவது ரொம்பவும் விசேஷமானது. ஆஸ்திகம் பரவ மிக அவச்யமானதிது.

---

**திருநாமம் – பகவன் நாமாவைக் கூறி திருமண் இடல்.**

# அஷ்டாவக்ர கீதை.



21 அத்யாயங்கள். 302 சுலோகங்கள்.

[ஸ்ரீ சிவகீதை மிகப் பெரியது. ஒரு ஆண்டில் பூர்த்தியாகாது. ஆதலால் அபூர்வமான இதை வெளியிடுகிறோம். மூலம் தனி நூலாக வேறிடத்தில் கிடைக்கலாம். அரிய கருத்தை மாத்ரம் எழுதுகிறோம்.]

கஹோளமுநிவரது புத்ரர் அஷ்டாவக்ரர். இவர் தாயின் கருவில் இருக்கும்பொழுது தந்தை அபஸ்வரமாக வேதம் கூறியதைக் கேட்டு நகைத்தார். எட்டு கோணலுடன் பிறப்பாய் என் தந்தை சபித்தார். தந்தையை வாதத்திற்கழைத்து அவர் தோற்றதால் வந்தி என்பவர் அவரைக் கடலில் தள்ளினர். வந்தி ஜநகராஜனது ஆஸ்தான வித்வான். அஷ்டாவக்ரர் வந்தியை ஜயித்து வருண லோகத்திலிருந்து தந்தையை மீட்டுவந்தார். அவரது கோணல் அகன்றது. ஜநகர் அஷ்டாவக்ரரிடம் வேதாந்தம் கேட்டார். அதே அஷ்டாவக்ர கீதையாம்:

ஜநக மஹாராஜன் அஷ்டாவக்ரரை நமஸ்கரித்து ப்ரபோ! எப்படி க்ஞாநம் உண்டாகும்? எப்படி முக்தி கிடைக்கும்? எனக் கூறவேண்டும் என ப்ரார்த்தித்தார். அஷ்டாவக்ரர் கூறினர்: புத்ர! முக்தி வேண்டுமானல் விஷயங்களை விஷம்போல் எண்ணி அதைவிடு. பொருமை ருஜுவாக இருத்தல், தயை, ஸந்துஷ்டி, ஸத்யம் இவைகளை அம்ருதம்போல் கைகொள். நீ பஞ்சபூதங்களால் உண்டான உடலல்ல, மண்ணுமல்ல, நீருமல்ல, தீயுமல்ல, வாயுவுமல்ல, விண்ணுமல்ல. இவைகளுக்கெல்லாம் ஸாக்ஷியான சித்ரூபன் என எண்ணு, முக்தி தானேவரும்.

உடலை நான் அல்ல எனப் பிரித்து, சித்ஸ்வரூபத்தில் தங்கியிருந்தால் இப்பொழுதே ஸுகம், ஶாந்தி, பந்த மோக்ஷம் இவைகள் உண்டாகும்.

நான் என்பது ப்ராம்மணன் முதலிய வர்ணத்தைச் சார்ந்ததல்ல. இந்த்ரியங்களுக்கும் அது விஷயமாகாது. பற்றில்லாதது, உருவில்லாதது, உலக ஸாக்ஷியாக ஸுக வடிவமாக இருப்பது.

தர்மா தர்ம, ஸுகதுக்கமிவை மனதைச் சார்ந்தவை. ஆத்மா கர்த்தாவுமல்ல போக்தாவுமல்ல. ஸதா முக்த ஸ்வரூபி. நீ ஒருவனுக இருந்து எல்லாவற்றையும் ஸாக்ஷியாகப் பார்க்கிருய். வேறொருவன் பார்க்கிருன் என்று எண்ணுவதே பந்தம்.

நான் கர்த்தா என்ற அஹங்காரமே க்ருஷ்ண ஸர்ப்பம்போலிருந்து உன்னைக் கடித்து ஹிம்ஸிக்கின்றது. நான் கர்த்தா அல்ல என்ற த்ருட நம்பிக்கை அம்ருதம்போல் இருந்து அந்த துக்கத்தை அகற்றி இன்பமளிக்கும்.

---

**लोकोत्तमाय** லோகோத்தமாய –உலகத்திலேயே மிகச் சிறந்தவராயும், **भुजगाधिप कङ्कणाय** பு⁴ஜக³ாதி⁴ப கங்கணாய – ஆதிசேஷனை கங்கணமாக அணிந்தவராயும், **गङ्गाधराय** க⁴ங்க³ாத⁴ராய – கங்கையைத் தரிப்பவராயும் **गजदानव मर्दनाय** க³ஜத³ானவ மர்த³னாய – கஜாஸுரனைக் கொன்றவராயும், **गौरीप्रियाय** கௌரீப்ரியாய – பார்வதி ப்ரியராயும், **शशिबाल कलाधराय** ஶஶிப³ால கலாத³ராய – இளம்பிறைமதி கலையைத் தலையில் அணிந்தவராயுமுள்ள **दारिद्र्य दुःख दहनाय** த³ாரித்³ர்ய து³:க² த³ஹனாய–தாரித்ரிய துக்க தஹனரான **शिवाय नमः** ஶிவாய நம: – ஶிவனின் பொருட்டு வணக்கம்,

3. **भानुप्रियाय भवसागर नाशनाय**
**कामान्तकाय कमलाप्रिय पूजिताय ।**
**नेत्रत्रयाय शुभलक्षण संस्थिताय**
**दारिद्र्य दुःख दहनाय नमः शिवाय ॥**

ப⁴ானுப்ரியாய ப⁴வஸாகர நாஶனாய
காமாந்தகாய கமலாப்ரிய பூஜிதாய ।
நேத்ரத்ரயாய ஶுப⁴லக்ஷண ஸம்ஸ்தி³தாய
த³ாரித்³ர்ய து:க² த³ஹனாய நம: ஶிவாய ॥

**भानुप्रियाय** ப⁴ானுப்ரியாய – ஸூர்ய ப்ரியராயும், **भवसागर नाशनाय** ப⁴வஸாகர நாஶனாய – ஸம்ஸார ஸாகரத்தை அழிப்பவராயும், **कामान्तकाय** காமாந்தகாய – மன்மதனை எரித்தவராயும், **कमलाप्रिय पूजिताय** கமலாப்ரிய பூஜிதாய – இலக்குமியின் கணவரால் பூஜிக்கப்பட்டவரும், **नेत्रत्रयाय** நேத்ரத்ரயாய – முக்கண்ணனாயும், **शुभलक्षणसंस्थिताय** ஶுபலக்ஷண ஸம்ஸ்திதாய–ஶுபலக்ஷணங்கள் பொருந்தியவராயுமுள்ள **दारिद्र्य दुःख दहनाय** தாரித்ர்ய து:க த²ஹனாய – வறுமையாகிற இன்னலை அகற்றுபவராயுமுள்ள **नमः शिवाय** நம: ஶிவாய – சிவனுக்கு நமஸ்காரம்.

---

# மஹாபாரதப் பூஞ்சோலே.

பாரத கேஸரி ஸ்ரீ T. S. பாலகிருஷ்ண சாஸ்த்ரிகள்.

[மஹா பாரதத்தில் புத்திக்கும், யுக்திக்கும் உகந்த ரஸமான ஸம்பவங்களே இத்தலேப்பின் கீழ் வெளியிடுகிறோம். சிந்தனேக்குரிய இக்கருத்துகளே நீங்களும் சிந்தித்து உசிதப்படி அனுபவிக்க வேண்டுகிறோம்.]

ஆசிரியர்.

## மஹா கணபதி ப்ரஸாதம்.

வேதவ்யாஸ பகவான் நமக்கு அளித்த எத்தனேயோ செல்வங்களுள் மஹா பாரதம் எனும் இதிஹாஸம், தாபத்ரயங்களேப் போக்கி, சாந்தி எனும் நிழலேத்தரும் ஒரு பூஞ்சோலே போன்றது. வேதவனங்களிலே நுழைந்து, எளியவர்களும் கடைத்தேற அங்கு உள்ள அரிய விதைகளேக் கொண்டு, பல பல தருக்கள், செடிகள், தளிர்க்கொடிகள், தழைக்க நமக்கிடையே ஒரு விசாலப் பூங்காவை அமைத்து அளித்தார்.

அப் பூங்காவை ஆசி நல்கி ஆரம்பித்து வைத்தார் பிருமதேவர். அமைக்க உதவினுர் ஐங்கரன் கணேச மூர்த்தி. இதன் பெருமையை தேவர்க்கும், பித்ருக்களுக்கும் யக்ஷ கந்தர்வர்களுக்கும், மற்றும் மனிதர்களுக்கும் முறையே எடுத்தோதினர் நாரதர், அஸிதர், தேவலர், சுகர், வைசம்பாயனர் முதலான பெரியோர்கள். இவ்வுன்னதத் தோட்டம் வளர்த்த மாமுனிவன், இதில் பெருங்குணம் படைத்த பல கற்பகக் கொடிகளே இடை இடையே வளரவிட்டு நம்முடைய ஆர்த்தியைப் போக்க சாதனம் உதவினுர். புத்தி மலரச் செய்யும், போக மோக்ஷமளிக்கும். பெரும்பிணி அகலும். நினேத்தவர் உளத்தில் நீங்கா இன்பம் ஊட்டும், இக்கற்பகக் கொடிகள் யாவை? கண்ணன் கழலிணேயில் அருள்மலர வழிபாடு செய்யும் "உத்தம பக்தியே".

## 2

எதிரே தோன்றின வாரண முகத்தவனே வணங்கி உபசரித்தார் வேதவ்யாஸர். 'நினேத்தேன். வந்துகுதித்தீரே' என்று மகிழ்ச்சி பொங்க பூசித்தார்.

"எதற்காக அழைத்தீர் என்னே"

"என் புத்தியில் மலர்ந்துள்ள பாரதம் எனும் வேத ஸம்ஹிதையை எழுதுவதற்குத் தங்களேயே நாடினேன்"

சுத்த அச்சாரவாக மிது - இது யாக பரிபாஷை.

'நான் சொல்லுகிறேன். தாங்கள் எழுதிக்கொள்ள வேண்டும்.'

"நன்று நன்று, இந்த வேலைக்கு நான்தானு அகப்பட்டேன்? அவகாசமில்லை அப்பனே எனக்கு. விரைவாகச் சொல்லவேண்டும். என் கரமசைந்தவண்ணம் இருக்கவேண்டும்! அதற்கேற்ப நீர் சொன்னுல் எழுதுவேன். எழுத்து நின்ருல் நானும் எழுந்துவிடுவேன்."

"அப்படியே யாகட்டும். ஆனுல் ஒரு விண்ணப்பம். எழுதும்பொழுது வார்த்தைகளின் பொருளை நன்ருகத் தெரிந்து கொண்ட பிறகே எழுதவேண்டும்."

" சரி சொல்லும்."

விக்னேச்வரர் அளித்த தடையா இது? வ்யாஸர் விக்னேச்வரரை மனதிலேற்றுத் துதிசெய்தார். (விக்னத்தைக் கொடுப்பவரும், அதை எடுப்பவரும் அவரே அன்ரே? உம்மை ஜயிக்க நீரே எமக்கருளும் என்று ப்ரார்த்தித்தனர் போலும்) சொல்லமுதம் பெருகியது. அதில் திகைத்துத் திளைத்து நின்ருர் கணேசரும். ஆழ்ந்தும் அறியமுடியாததுமான 8800 முடிச்சு (க்ரந்தி) ச்லோகங்கள், விநாயகர் அருளால் விநாயகர்க் காகவே இந்த இதிஹாஸத்தில் அமைந்துவிட்டது. தானும், சுகரும், ஒருவாறு ஸஞ்ஜயனுமன்றி மற்றவர் யாரும் இவைகளை அறிய இயலாது என்று வ்யாஸரே கூறியுள்ளார்.

# 3

**नारायणं नमस्कृत्य नरं चैव नरोत्तमम् ।**
**देवीं सरस्वतीं चैव ततो जय मुदीरयेत् ॥**

**நாராயணம் நமஸ்க்ருத்ய நரம் சைவ நரோத்தமம் |**
**தேவீம் ஸரஸ்வதீம் சைவ ததோ ஜயமுதீ[3] ரயேத் ||**

இது பாரதத்தின் முதல் ச்லோகம். வ்யாஸர் அமைத்தபடி; பின்னே அவருடைய சிஷ்யர்கள் 'தேவீம் ஸரஸ்வதீம் வ்யாஸம்' என்று அமைத்துக் கொண்டனர் என்பர்.

இதன் பொருள்: நாராயணனை நமஸ்கரித்து, நரனை நமஸ்கரித்து, (பிறகு) நரோத்தமனையும் நமஸ்கரித்து, தேவியை நமஸ்கரித்து, ஸரஸ்வதியையும் நமஸ்கரித்து, 'ஜயம்' எனும் பாரதம் சொல்லப்படவேண்டியது.

---

***அச்சாவாகர் என்ற ரித்விக்குக்கு அதிகவேலை இல்லை.***

நாராயணனை நமஸ்கரித்த பிறகு நரனை நமஸ்கரிக்க வேண்டுமா ? அந்த நரன் யார் ? நரோத்தமன் யார் ? அல்லது மூவரும் ஒருவர்தானா? தேவி வேறு? ஸரஸ்வதி வேறு? அப்படி எனில் ஸரஸ்வதியையும் என்று சொல் வானேன் ? ஜயம் என்று பாரதத்திற்குப் பெயரிட்ட அதிசயம், பொருத்தம், என்ன ?

இந்த ஒரு ச்லோகத்தின் கருத்தே, பின்னே 18 பர்வாக்களில் பரந்த இந்த இதிஹாசத்தின் ஸாரத் தைத் தாங்கி நிற்கிறது. முக்காலமும் உணர்ந்த ஸர் வக்ஞரான விக்னேச்வரர் இந்த முதல் வாக்கை பன் முறை அனுபவித்து திளைத்திருக்கவேண்டும். இல்லா விடில் வ்யாஸருக்கு இதுபோன்ற முதுமொழிகளைச் சேர்க்க அவகாசமும் நமக்கும் ஓர் ஒப்பற்ற பொக்கிஷ மும் எங்கு கிடைத்திருக்கப் போகிறது? இதுவும் வ்யாஸ ருடன் சேர்ந்து ஆரம்பத்தில் அளித்த "மஹா கணபதி யின் திவ்ய ப்ரஸாதமே."

## 4. ஜயம்.

பெருங்காடு ஒன்றில் இருமரங்கள் அடர்ந்து வளர்ந் திருந்தன. ஒன்று மிகப் பெரியது. ஒன்று அதைவிடச் சிறிது சிறியது. அவைகளின் அடிமரமும் கிளைகளும் அடர்த்தியாகவும் செழுமையாகவும், பூக்களும், கனி களும் கொடுத்து விளங்கின. அவையிரண்டும் ஒன்றை யொன்று நெருங்கியே முளைத்திருந்ததால் காற்றில் அடிக்கடி மோதிக்கொண்டே இருந்தன. பெரிய மரத் தின் கப்பும் கிளைகளும், குறுக்கும் நெடுக்குமாக முறை யின்றிப் பரவி, அருகிலுள்ள சிறிய மரத்தை வளரமுடி யாதபடி இடையூறு விளைவித்துக்கொண்டே இருந்தது. இது போகிற வேஹத்தைப் பார்த்தால் அடுத்திருந்த சிறிய மரத்தை அழித்தே விடும்போலத்தோன்றியது.

ஆனால் அந்த சிறிய மரமோ வெகு நிதானமாகவே கிளம்பியது. இச்சைப்படி வளர்ந்திருந்த பெருமரத்தின் நிழலில் ஒதுங்கியே கிடந்தது. கிளைகளும் அதிகமில்லை. வேர் ஆழமாகச் சென்றுகொண்டிருக்கிறது. பல வரு ஷங்களாகியும் அழியாது என்று பார்த்தவர் சொல்லிக் கொண்டனர். காற்றடித்தால் இரு மரங்களும் மோதிக் கொள்ளும். வளர்ந்த பெரிய மரம் அதிகமாக அலைந்து அலைந்து ஆடும். சிறியதோ தன்னிடத்தில் இருந்தபடி

---

*மற்றவர்களுக்கு மாறான கார்யம் செய்பவர்.*

நிற்கும். வருஷங்கள் பல செல்ல சிறியமரமும் வளர்ந்து விட்டது. ஒருசமயம் என்றுமில்லாது பெரும் சூருவளிக் காற்று அடிக்க ஆரம்பித்தது. பெரிய மரத்தின் கிளைகள் ஒவ்வொன்ருக விழ ஆரம்பித்தன. அடிமரம் ஆட்டங் கண்டது. பலக்குறைவினுல், வேரும் நிலை பெயரவே இந்த நெடுமரம் ஒருநாள் அடியோடு சாய்ந்துகிடந்தது.

சிறிய மரத்திற்கும் சேதம் உண்டு. ஆனுலும் தன் நிலை பெயராமல் நின்றுவிட்டது. கிளைகள் துளிர்க்கப் பூவும், காயும், கனியுமாகப் புது மணத்துடன் பல் லாண்டு பலருக்கு நிழல்தந்து, காத்து, தன் கிளைகளில் பல பறவைகள் தங்கவும், தன் கனிகளால் பலரும் பயன் பெறவும் உதவி, வெற்றியுடன் விளங்கியது.

**दुर्योधनो मन्युमयो महाद्रुमः स्कन्धः कर्णः शकुनिः तस्य शाखा ।**

**दुश्शासनः पुष्पफले समृद्धे मूलं राजा धृतराष्ट्रोऽम्बिकेयः ॥**

துர்யோதநோ மன்யுமயோ மஹா த்ருமஃ ஸ்கந்தஃ கர்ணஃ சகுநிஃ தஸ்ய சாகா | துச்சாஸநஃ புஷ்ப பலே ஸம் ருத்தே மூலம் ராஜா த்ருதராஷ்ட்ரோம்பிகேயஃ ||

கோபம் நிறைந்த துர்யோதனன் ஒரு பெரியமரம். கர்ணன் (அம் மரத்தைத் தாங்கின) அடி மரம். சகுனி (அங்குமிங்கும் பரவின)கிளை.துச்சாஸனனே (உயர்குண மெதுவு மில்லாத) பூவும், கனியும். "அம்பிகா" என் பவளுக்குப் பிறந்த திருதராஷ்டிரன் (அலைந்த மனமும், உண்மைத் தெளிவுமில்லாத உறுதியற்ற) வேர்.

**युधिष्ठिरो धर्ममयो महाद्रुमः स्कन्धोऽर्जुनः भीमसेनोऽस्य शाखा ।**

**माद्रीसुतौ पुष्पफले समृद्धे मूलं कृष्णो ब्रह्म च ब्राह्मणाश्च ॥**

யுதிஷ்டிரோ தர்மமயோ மஹாத்ருமஃ ஸ்கந்தோர்ஜுநஃ பீமஸேநோஸ்ய சாகா | மாத்ரீ ஸுதௌ புஷ்ப பலே ஸம்ருத்தே மூலம் க்ருஷ்ணஃ ப்ரும்ம ச ப்ராம்மணுச்ச ||

தருமமயமான யுதிஷ்டிரர் ஒரு பெரிய மரம். அர் ஜுனன் (தாங்கி நிற்கும் — நராவதாரம்) அடி மரம். பீமஸேனன் கிளைகள். நகுல ஸஹாதேவர்கள் பூவும் கனியும். ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மாவும், ப்ரும்மமும் (வேத ஸ்வரூபமும்), பிராம்மணர்களும் (நிலைபெற்ற) வேர்.

தருமம் ஜயித்த கதை பாரதம். அதை "ஜயம்" என்றழைத்தார் வேதவ்யாஸ பகவான். (தொடரும்)



# உபமன்யு பக்த விலாஸம்.



[பகவானே பக்தருக்கு அதீனமானவர். பக்தரைப் பூஜித்தாலும் அவர் சரிதத்தைக் கேட்டாலும் பகவானுக்கு ஸந்தோஷமுண்டாகும். பக்தர்களுக்குத் தனக்கு ஸமமாக இடமளித்திருக்கிறார். விஷ்ணு பக்தர்களுக்கு ஆழ்வார் என்றும், சிவபக்தருக்கு நாயன்மார் என்றும் பெயர். இவர்களுக்கு ஆலயத்தில் விக்ரஹமும், உத்ஸவமுமுண்டு. பக்தர்கள் சரிதம் வடநாட்டிலுள்ளது வேறு. இங்குள்ள சிவபக்தர்கள் சரித்த்தை உபமன்யு என்ற வியாக்ரபாதரின் குமாரரும், அகஸ்த்யரும், ஸம்ஸ்க்ருதத்தில் எழுதியிருக்கிறார்கள். தமிழில் நக்கீரர் என்பவர் அதை செய்யுள் வடிவமாக இயற்றியிருக்கிறார். சைவம் தழைக்கும்படிச் செய்தவர்கள் அப்பர், ஸுந்தரர், மாணிக்கவாசகர், ஞானசம்பந்தர் என்பவர்கள்.

அறுபத்துமூன்று நாயன்மார் சரிதத்தையும் இவ்வாண்டில் பூர்த்திசெய்யக் கருதியுள்ளோம். தனிபுத்தகமாகப் போடவில்லை.]

## சுந்தரமூர்த்தி நாயனார் சரிதம்.

நைமிஶாரண்யத்தில் ஸூதபுராணிகர் சிவதத்வ விவேகமெனும் இதிஹாஸத்தைக் கூறிக் கொண்டிருக்கும் பொழுது மிக அழகிய ஒருவர் வந்தார். அவரைக் கண்டவுடன் ஸூதபுராணிகர் எழுந்து வணங்கினார். முனிவர்கள் மிகவும் ஆச்சர்யப்பட்டு அவர்யார் என்று வினவினர். ஸூதர் அவர்தான் சுந்தரமூர்த்தி என்றுகூற, நீங்களே வணங்கும்படியான அவரது சரித்த்தைக் கூறவேண்டுமென வேண்டினார்கள்.

ஒருஸமயம் தேவி கைலாஸத்தில் நிலைக்கண்ணாடியில் பரமஶிவனுடைய உருவத்தைக்கண்டு மிகசுந்தரமான பிரதிபிம்பத்தை உயிருள்ளதாகச் செய்யவேண்டுமென வேண்டினாள். அங்ஙனமே உயிற்பெற்று சிவகணங்களுடன் அவர் ஸஞ்சரிக்கும் பொழுது அநிந்திதை, கமலினீ என்ற பார்வதியின் தோழிகளைக் கண்டு அவர் ஆசை கொண்டார். இதையறிந்த பரமசிவன் நீங்கள் அவனியிற்சென்று காமனையைப் பூர்த்திசெய்து பின்னர் கைலாயம் வாருங்கள் என்றார். இல்லறத்தில் சிக்கினால் எப்படி கரை ஏறுவதெனவேண்ட நான் உன்னை தடுத்தாட்கொள்வேன் என்றார் சிவன்.

அவர் திருமுனைப்பாடி என்றவூரில் கபர்தீ (சேலக்ஞா)

சடையனர் இசை நாயனர் என்ற தம்பதிகளுக்கு புத்ர ஞகைப்பிறந்தார். பெற்ரேர் கமலாலய சங்கரன் (நம்பி யாரூரார்) எனப் பெயரிட் டார்கள்.

அக்குழந்தை சுறுசுறுப் புடன் அழகாக வீதியில் விளையாடிக் கொண்டிருந் தார். அந்நாட்டு அரசஞன நரஸிம்ஹ முனி என்பவர் குழந்தை யழகிலீடுபட்டு தன் அரண்மனைக்கழைத் துச்சென்று அதை வளர்த் துவந்தார். காலத்தில் உப நயனம் செய்வித்து கல் யாணமும் செய்து வைக்கத் தக்க கன்னிகையைத் தேடி ஞர். ஷடங்கவித் என்பவ ருடைய கன்னிகை 'புத்தூர்' என்ற ஊரில் இருப்பதாகக் கேட்டு கன்னிகையை அவ ருக்கு அளிக்கும்படிக்கேட்டு அனுப்பிஞர். விவாஹத் திற்குவேண்டிய ஸகல ஏற் பாடுகளும்ஜம்புநகரீ என்ற ஊரிலே ஏற்பாடு செய்யப் பட்டது. அதற்கு பூர்வாங்க மாக ஸகல கர்மாக்களையும் செய்து சுந்தரர் குதிரைமீது புத்தூருக்குக் கிளம்பிஞர். ஆங்கு கல்யாண வேதியில் விவாஹம் ஆரம்பிக்கும் பொழுது சிறந்த சிவனடி யார் வேஷங்கொண்ட ஓர் பிராம்மணக் கிழவர் அங்கு தோன்றி "விவாஹத்தை நிறுத்து" இவர் நமது அடிமை. அதற்கு அறிகுறி யாக இவர் மூதாதை எழு தித்தந்த அடிமை ஓலை இதோவென்று காட்டிஞர்.

சுந்தரர் கோபங்கொண்டு ஓ பித்தா? நானெப்படி அடி மையென அதைப் பிடுங்கி கிழித்து எறிந்தார். உங்கள் ஊர்யாது? அங்கே சென்று நீர் வழக்கு இடலாம் என அங்குள்ளோர் கூற எனது ஊர் நவநீதபுரம்-திருவெண் ணெநல்லூர். அங்குசென்று ஸாக்ஷியுடன் ரூபிக்கிறேன் என்று எல்லோரையும் அழைத்துச்சென்ருர்.

மூலப்பிரதியான அடிமை சீட்டை ஸாக்ஷிகள் கையெ ழுத்துடனும் இவர் மூதாதை கையெழுத்துடனும் காண பித்தார். ஆனல் உமது வீடு எங்கே என்றபோது ஆல யத்திற்கு அழைத்துச் சென்று சுந்தரருக்கு விருஷ பாரூடராகக் காக்ஷியளித்து பூர்வவிஷயத்தை நினைவூட்டி உன்னைத் தடுத்து ஆட் கொள்ளவே இதைச் செய் தேன். பித்தாஎன நீ என்னை அழைத்ததாலதை முதலா கக்கொண்டு தமிழில் என் னைப்பாடு என்ருர். அதனல் "பித்தாபிறை சூடி" என சுந்தரர் பாட ஆரம்பித்தார்.

---

**இது சச்சோடி—வியாகரண பரிபாஷை.**

அதுமுதல் கோஷ்டியுடன் க்ஷேத்ராடனம் செய்தார். திருவதிகை என்ற பண்ருட்டியில் திருநாவுக்கரசர் ஆலயத்தைப் பெருக்கி சுத்தம் செய்வதால் தனது காலடி அங்கே படக்கூடாதென வெளியிலிருந்தே பாடிச் சென்றார். ஞானசம்பந்தர் பிறந்த ஊரென சிய்யாழியிலும் கால் வைக்காமல் பகவானைப் பாடினர். அவர் உத்தரவுப்படி திருவாரூர் வந்துமணக்கோலம் தரித்து பகவானைப் பாடினர். சிவனும் அவருக்கு மாப்பிள்ளைத்தோழன்போல் அவருடன் செல்வர்.

அவ்வூரில் ஶ்ருங்காரநாயிகாயென்ற ருத்ர கன்யகையின் பக்தியைக் கண்டு தியாகராஜர் முன்னம் கைலாஸத்தில் ஸுந்தரரைக் கண்டு ஆசைகொண்ட கமலினியை அவளுக்குப் பெண்ணகப் பிறக்கும்படிச் செய்தார். ஸாகரிதா-பறவையார் என்ற அக்கன்யகையை தியாகர் உத்தரவுபடி மணந்தார். ஒருநாள் தில்லை தீக்ஷிதர்கள் திருவாரூர் வர அவர்கள் நம் பக்தர்களே! அவர்களைப் பற்றி பாடு என்று தியாகர் கூறினர். அவர்களை யாரென அறியேனே என்று சுந்தரர்கூற 'தில்லை வாழ் அந்தணர் என' சிவன் அடி எடுத்துக்கொடுக்க சுந்தரர் அப்படியே பாடினர்.

குண்டபுரம் (குண்டையூர்) என்ற ஊரிலே ஒரு பக்தர், சுந்தரமூர்த்தியிடம் பேரன்பு பூண்டவர். பிரதிதினம் உணவுக்கு வேண்டிய ஸகல பொருள்களையும் அன்றன்றும் கொண்டு கொடுப்பார். ஒரு ஸமயம் மழையின்றி துர்பிக்ஷமுண்டாயிற்று. அவர் தியாகனை நாடிக்கதறினர். அவர் அருளால் நெல் மலைபோல் தோன்றிற்று. இதைஎப்படி எடுத்துச் செல்வேனென அவர் வேண்ட தியாகர் தனது பூத கணங்களை அனுப்பி திருவாரூர் தெருவெல்லாம் தான்யத்தை நிறைக்கும்படிச் செய்தார். பக்தரான சுந்தரர் ஒருவரால் அனைவருக்கும் பஞ்சமகன்றது.

### செங்கல் பொற்பாளமானது.

சுந்தரர் வீடு அடியார்கள் தங்கும் மடமாயிற்று. பங்குனியுற்சவம்நெருங்கிற்று. அடியார் கூட்டம் பெருகும்; என் செய்வதென சுந்தரர் அடியார்களுடன் திருபுகலூரீசன் ஸன்னதியில் வந்து தங்கினர். இரவில் அனைவரும் செங்கற்களை தலையணையாக வைத்து உறங்

கினர். காலையில் அவை அனைத்தும் பொற்பாளங்களாயின. சிவன் தந்ததென அவைகளைக் கொண்டு அடியாருக்கு அன்னமளித்தார்.

### விருத்தாசலம் நதியில் கொட்டி கமலாகரத்தில் பெறல்.

மற்றொருஸமயம் விருத்தாசலம் சென்று பொருள் வேண்டுமென பாடினார். பனிரண்டாயிரம்பொன்னைத்தந்து அதை மணிமுத்தா நதியில் கொட்டி திருவாரூர் கமலாலயத்தில் எடுத்துக் கொள்ளும்படி பகவான் கூறினார். ஆற்றில் விட்டதைக் குளத்தில் தேடினால் கிடைக்குமா? என பலர் பரிஹஸித்தனர். விரைவில் அவைகளைத் தேடி எடுத்து எல்லோரும் வியக்கும்படிச் செய்தார் சுந்தரர்.

மற்றொருஸமயம் அடியார் கூட்டத்துடன் க்ஷேத்ராடனம் செய்யும் போது பசி தாகத்துடன் எல்லோரும் வாடினர். திருக்கருகாவூரில் பகவான் ஒரு பிராம்மண ரூபங்கொண்டு மலைபோல் சோற்றையும் தீர்த்தத்தையுமருளினார். காஞ்சிக்கு வந்து பகவானளித்த பொன்னைக் கொண்டு அடியாரை ஆநந்திக்கச் செய்து திருவொற்றியூர் சென்றார்.

### ச்ருங்கலா மணம்.

முன்னம் கைலாஸத்தில் சுந்தரரை மணக்கவிரும்பிய அநிந்திதா என்பவள் திருவொற்றியூருக்கு அருகில் உள்ள பானுபுரம் என்ற ஊரிலே அவ்வூர் ராஜன் மகளாகப் பிறந்து ஸ்ருங்கலா என்றபெயருடன் வாழ்ந்து வந்தாள். தனக்கென பிறந்துள்ள ஒப்பற்ற ஒரு சிவ பக்தனையே மணப்பேன் என திருவொற்றியூரில் கன்யர்மடம் அமைத்து பகவானுக்கு புஷ்பகைங்கர்யம் செய்து வந்தாள். அதை அறிந்த சுந்தரர் அவளது முற் பிறவியை உணர்ந்து கைலாஸநாதன் சொற்படி இவளையும் மணந்து சாப மகன்றபின் கைலைசெல்லக் கருதினார். பகவான் இவருக்கு யாப்பிள்ளைத் தோழனாக இருப்பதால் அவரை நினைக்க அவர் சங்கலியின் முன் தோன்றி அங்குள்ள மகிழமரத்தடியில் உன்னை விட்டுப் பிரிவதில்லை என்று (அதே மகிழடிச் சேர்வை) அவரை ஸத்யம் செய்யச் சொல்லி பின் இருவருக்கும் மணம் செய்வித்தார். சில நாளங்கு தங்கி இருந்தார். திருவாரூர் நினைவு வந்தது. உடனே அடியார் கூட்டத்துடன் கிளம்பினார். (தொடரும்)

# திரை விலகுமா?

ஸத்கதாம்ருத கலாநிதி, ஸ்ரீ T. S. பாலகிருஷ்ணசாஸ்த்ரிகள்.

ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள் ஒரு சமயம் திருவையாற்றிலிருந்து புண்ய ஸ்தல யாத்திரை புறப்பட்டு, திருப்பதி க்ஷேத்ரம் வந்து சேர்ந்தார். ஏழுமலைகளையும் கடந்து, அங்கு வீற்றிருக்கும் பரம புருஷனை வெகு ஆவலுடன் தரிசிக்க ஸந்நிதி வந்தார். அவர் ஸந்நிதி வந்த சமயம் அங்கு பகவானை தரிசனம் செய்யமுடியாமல் திரை போடப்பட்டிருந்தது. அது கண்டு மிகவும் மனம் வாடி நின்றார். திரை விலகி திருப்பதி வேங்கடரமணனை தரிசனம் செய்வது எப்போது என ஏங்கி நின்றார். அருகில் இருந்தவர்கள் "சீக்கிரம் தரிசனம் கிடைத்துவிடும்! கவலை வேண்டாம்! இதோ அழைத்து வருகிறோம் அர்ச்சகர்களை!" எனறெல்லாம் ஆறுதல் சொன்னார்கள். இந்த ஆலயத்தின் திரையை விலக்கிவிடலாம்! யாராலும் விலக்கமுடியாத திரை நமக்குள்ளே ஒன்றிருக்கிறது. அதை விலக்கவேண்டியவன் இந்த வேங்கடரமணனே! இவனையே வேண்டுகிறேன்! என்று தன் ஹிருதய பாவம் த்வனிக்க ஒரு கீர்த்தனம் மூலம் அந்த பரம புருஷனை வேண்டுகிறார்.

ராகம்—கௌளீபந்து] பல்லவி. [தாளம்—ஆதி.

தெரதிய்யக ராதா நாலோனி
திருப்பதி வேங்கட ரமண மத்ஸரமனு — (தெ)

அநுபல்லவி.

பரம புருஷ தர்மார்த்த மோக்ஷமுல
பாரதோலு சுன்னதி நாலோனி — (தெ)

சரணங்கள்.

1. மத்ஸமு ஆகலி கொனி காலமுசே—மக்னமைன ரீதியுன்னதி
அத்ஸமைன தீப ஸந்நிதினிமறு-கட்டபடி சொசிநட்
டுன்னதி — (தெ)

2. இரவொந்தக புஜியிம்சு ஸமயமுன—ஈகதகுலு ரீதியுன்னதி
ஹரிதியானமு ஸேயுவேள சித்தமு—அந்த்யஜுவாடகு
போயி நட்டுன்னதி — (தெ)

3. வாகுரமனி தெலியக ம்ருககணமுலு-வச்சி தகுலுரீதியுன்னதி
வேகமே நீ மதமுனனு ஸரிஞ்சிதி—த்யாக ராஜநுத
மதமத்ஸர மனு — (தெ)

---

பித்தளையை ஸ்வர்ணமாகச் செய்வது.

**பொருள்:**—திருப்பதி வேங்கடரமண! என்னுள்ளே இருக்கும் மாத்ஸர்யம் என்ற திரையை விலக்கலாகாதா? ஹே பரம புருஷ! தர்மம், அர்த்தம், மோக்ஷம் இவைகளை (இந்த மாத்ஸர்யம்) தூரத்திலே விரட்டுகிறதே!

**சரணங்கள்:**—1. மீன் தன் பசிக்கு தூண்டில் முள்ளை நாடி (அறியாமல் மயங்கி) அழிவடைவதுபோல உள்ளது என்நிலைமை. நிர்மலமான தீபப்ரகாசத்தைப் பரவமுடியாதபடி நடுவிலே (மாத்ஸர்யம்) வந்து மறைக்கிறது.

2. இரையை (ஆகாரத்தை) நன்கு புசிக்கும் தருணத்தில் ஈ தொண்டைக்குள் சிக்கினதுபோல் இருக்கிறது என் நிலை. ஹரியை த்யானம் செய்யும்பொழுது, என் சித்தமானது (போகத் தகாத இடங்களுக்கு) புலைச்சேரியில் போய் உட்கார்ந்திருக்கிறது.

3. வலை வீசியுள்ளதை அறியாமல் மிருகக் கூட்டங்கள் அதில் வந்து சிக்கிக்கொள்ளுவதுபோல என் நிலைமை இருக்கிறது. உன்னை வேண்டுகிறேன்! (தியாகராஜநுத); உன் அருள்பெறும் கருத்தில் நிற்கிறேன்! மதம், மாத்ஸர்யம் என்னும் திரைகளை விலக்கலாகாதா?

**கருத்து:**—புத்தியை மயக்கி மருளச்செய்வது மாத்ஸர்யம். காமம், க்ரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் இவைகளில் மாத்ஸர்யமே அழுத்தமான திரை என்கிறார். மற்றவைகளை ஜயித்தாலும், இதற்கு வசப்பட வேண்டியவனே. பரமபுருஷன் அருள் இல்லாவிடில் தப்ப முடியாது. தூண்டிலில் அகப்பட்ட மீன், வலையில் சிக்கிய விலங்குகள் இதற்கு உபமானமாகச் சொன்னார். அறியாது வரும் இடையூறுகளுக்கு ஈ தொண்டையில் சிக்கினதைச் சொன்னார். மனம் விபரீத வேகமுடன் அலைகிறது என்பதற்கு, மற்றொரு (ஹாஸ்யமான) உபமானம். பஜனைசெய்துகொண்டிருக்கும் வேளையில் இவன் சித்தம் புலைச்சேரிக்குப் போனது விநோதம்தானே?

"இத்தனையும் பார்த்திருக்கிறாய்! நானோ உன்னைநாடி வந்துகொண்டிருக்கிறேன்! உன் பக்தன்! எனக்கு ஏன் இந்த மறைவு? உன்னை நன்கு அறிந்துகொள்ள 'மாத்ஸர்யம்' என்ற திரையை விலக்கலாகாதா?" என்றார். திரையும் விலகியது.

---

**தோபகர்ணம்—புராணக் கதை பரிபாஷை.**

# பால பாரதம்.





## உத்யோக பர்வா. (ஆவணிமீ தொடர்ச்சி)

**கே :** துர்யோதனுதிகள், பாண்டர்களுக்கு பாதிராஜ்யம் கொடுத்து சமாதானம் செய்து கொள்ளச் சொன்னதை ஏற்றுக் கொண்டிருக்க மாட்டார்கள் அல்லவா ?

**ப :** அதோடு நிற்காமல் உத்தரகோக்ரஹணத்தில் அர்ஜுனனைப் பார்த்துவிட்டதால் — அக்ஞாத வாஸத்தில் கண்ணில்பட்டதால்—மறுபடியும் பன்னிரண்டு வருஷம் பாண்டவர்களைக் காட்டிற்குப் போகச் சொன்னார்.

**கே :** அதுதான் ஏற்கனவே தீர்ந்து முடிந்த விஷயமாய் விட்டதே ! பீஷ்மரும், பாண்டவரைப் பார்த்தது பதினன்காம் ஆண்டில்தான் என்று தீர்ப்புக் கூறினரே !

**ப :** அதை மறுத்துக் கூறினர். ஸ்வகார்யப் புலிகள் அல்லவா ?

**கே :** பலராமர் எந்த கக்ஷியில் சேர்ந்தார் ?

**ப :** அவருக்குத் தன் சீடனுன துர்யோதனன் கக்ஷியில் சேரத்தான் விருப்பம். ஆனல் தம்பி கிருஷ்ணன் பாண்டவரிடம் அன்புகொண்டிருக்கிறார் என்பதால் போர் துவக்கும் ஸமயத்தில் தீர்த்தயாத்திரை சென்றிருந்தார்.

**கே :** கிருஷ்ணன் என்ன செய்தார் ?

**ப :** தனது புத்ராதி பரிவாரங்களை யெல்லாம் ஒன்றுகவும், ஆயுதமெடுத்துப் போர் புரியாமல் தான்மாத்ரம் ஒன்றுகவும் இருந்து, யாருக்கு எது தேவையோ? அதை எடுத்துக் கொள்ளலாம் என்றார்.

**கே :** பகவானது பெருமையை யுணர்ந்த பார்த்தன் பகவானையே விரும்பி இருப்பான் ! பெருமையறியாத துரியோதனன், பிள்ளை முதலியவைகளை விரும்பியிருப்பான் !

**ப :** நன்றுகச் சொன்னய் ! அதோடு பகவானை வரிக்கச்சென்ற துர்யோதனன் படுத்திருந்த க்ருஷ்ணனது தலைமாட்டில் வந்துட்கார்ந்தான். அர்ஜுனனே அவரது பாதாரவிந்தத்தில் அமர்ந்தான்.

---

**தோர்பி: கர்ணம்—கைகளால் காதைப் பிடித்தல்.**

கே: ஆனல் யுத்தம் நிச்சியமெனத் தீர்மானமாயிற்ரு?

ப: ஆம்! அப்படித்தான்! ஆயினும், த்ருதராஷ்ட்ரன் போரில் தன் பிள்ளைகள் மாள்வார்கள் என உணர்ந்து ஸஞ்ஜயனைத் தர்மரிடம் அனுப்பி யுத்தத்தினல் வரும் கொடுமைகளை விளக்கி, யுத்தம் செய்யாமல் இருக்க முயற்சித்தான்.

கே: தர்மர் என்ன சொன்னர்?

ப: எனக்கும் அப்படித்தான் விருப்பம். ஆயினும் கிருஷ்ணன் சொன்னபடி நடப்பதாகக் கூறினர்.

கே: கிருஷ்ணர் என்ன சொன்னர்?

ப: தான் தூதனுக வந்து வேண்டியவற்றைச் செய்வதாகச் சொல்லி யனுப்பினர். ஆனல் விதுரர், ஸஞ்ஜயர், அனைவரும் பாண்டவருக்குப் பாதி ராஜ்யம் அளித்து, கௌரவர் அழியாதிருக்கும்படி கூறினர்.

கே: த்ருதராஷ்டிரன் அதை ஏற்றுக்கொண்டான?

ப: நல்லவர் சொல்லும்பொழுது தர்ம சிந்தையும், கௌரவர் கூறும்பொழுது அதர்ம சிந்தையும் உண்டாயிற்று. அதனல் அன்றிரவு தூக்கமின்றி விதுரரிடமும், ஸனத்ஸுஜாதரிடமும் தர்மத்தையும் வேதாந்தத்தையும் கேட்டான்.

கே: விதுரரே எல்லாம் கூறுவார் அல்லவா? ஸனத்ஸுஜாதரை யழைப்பானேன்?

ப: விதுரர் தான் நான்காம் வருணத்தில் பிறந்ததால் வேதாந்தமுபதேசிப்பதற்கு அர்ஹரல்ல என்று அம்முனிவரையழைத்தார். அவருடைய உபதேசமான ஸநத்ஸுஜாதீயம் என்பதற்கும் பாரதத்திலுள்ள பகவத்கீதைக்கும் விஷ்ணு ஸஹஸ்ரநாமத்துக்கும் ஆதிசங்கர பகவத்பாதாள் பாஷ்யம் எழுதினர்கள்.

கே: அவ்வளவு சிறந்த உபதேசத்தைக் கேட்டு த்ருதராஷ்டிரன் மனம் தெளிந்ததா?

ப: எப்படித் தெளியும்? மறுநாள் காலையில் பீஷ்மர் துரோணர் விதுரர் முதலியவர்களும் பாண்டவர் பலத்தையும் க்ருஷ்ண ஸஹாயத்தையும் கூறி, பாதி ராஜ்ய மளிக்கும்படி கூறவும் அவைகளும் அவன் காதில் ஏறவில்லை.

---

முதலில் இதை ஆரம்பித்தவர் மஹா விஷ்ணுவே.

# குமதி ஸுமதி ஸம்வாதம்,

கௌண்டின்யன்.

**குமதி :** பேஷ்! நல்ல ஸமாசாரம் கிடைத்தது! நம்மளவாள் முன்னே ஜட்ஜாகக்கூட இருந்தாளா? சொல்லு! சொல்லு!

**ஸுமதி:** ஜட்ஜ் என்றவுடன் ஹைகோர்ட் ஜட்ஜ் என நினைத்துக் கொண்டாயா? இல்லே! இல்லே!! மண்டநமிச்ரர் என்ற மஹா வித்வானுக்கும் ஸ்ரீ சங்கராசார்யாருக்கும் நடந்த விவாதத்தில் உபயபாரதி நீதிபதிபோலிருந்து இருவர் வாதங்களேயும் கேட்டுத் தீர்ப்புச்சொன்னுள்.

**கு :** இது இன்னும் ஆச்சர்யம்! அவ்விருவரும் பழங்கால வேத சாஸ்த்ர வித்வான்களில்லேயா? அவர்கள் கூட ஒரு ஸ்திரீயை மத்யஸ்தராயிருக்க விரும்பினார்களா?

**ஸு :** மற்றவர் கூறியதைக் கேட்டு தற்கால உலகம் வைதிகர் ஸ்த்ரீகளை மதிப்பதில்லே. மட்டமாக மதிக்கிறார் என்ற தப்பான எண்ணம் பரவிற்று. "ஸ்த்ரீக்கும் ஸ்ரீயுக்கும் பேதமில்லே என்பது" முன்னோர் சொல்! தெரியுமா?

**கு :** சரி! உபயபாரதி யார்? என்ன வாதம் நடந்தது?

**ஸு :** மண்டநமிச்ரருடைய மனைவி. மிச்ரர் கர்மாதான் முக்தி தரும் என்றார். சங்கரர் க்ஞானந்தான் முக்திதருமென்றார்.

**கு :** இன்னும் விசித்ரமாக இருக்கிறதே! எதிரியின் மனைவியை எப்படி மத்யஸ்தமாக சங்கரர் ஏற்றார்?

**ஸு :** ஸ்த்ரீகளுக்கு நேர்மையான பக்ஷபாதமில்லாத குணமுண்டு. எதிரி பத்னியானுல் என்ன? என்று சங்கடமான பந்தயம் வைத்திருந்தும் நீதிதவருள், என ஏற்றுக் கொண்டார்.

**கு :** சங்கரரின் அவதாரம் ஆசார்யர் அல்லவா? அவரே இவ்வளவு கௌரவம் பெண்களிடம் வைத்திருக்க, முன்னோர் ஸ்த்ரீகளே அடிமையாக்கி படிப்பில்லாமல் வைத்திருந்தனர் என சிலர் துஷ்பிரசாரம் செய்கின்றனரே!

**ஸு :** நீயும் அப்படிதான் இதை அறியாமல் பிறர் கூறுவதைக் கேட்டு என்மீது எறிந்து விழுந்தாயே?

**கு :** நீ கூறுவது உண்மைதான்! என்னை மன்னித்துவிடு. சங்கடமான பந்தயமென்றாயே அது என்ன?

**ஸு :** சாஸ்த்ர வாதத்தில் தன்புருஷன் தோற்றால் ஸன்யாஸியாகி சங்கரருக்கு சிஷ்யனாகவேண்டும். துறவி தோற்றால் மணம் புரிந்து, மண்டனருக்கு மாணவனாக வேண்டும்.

---

லாக்கடம்—மாயவரத்தில் உள்ள பிரஸித்த இடம்.

கு: ஸங்கடத்திலும் மஹாஸங்கடம். எப்படி இருவர் எதிரிலும் அமர்ந்து வாதத்தைக் கேளாமல் தீர்ப்புக் கூறினுள்.

ஸா: அதுதான் நமது இனத்திற்குள்ள இயற்கையான ஸாமர்த்யம். இதை காளிதாஸன் புகழ்ந்து கூறியிருக்கிறுரே!

கு: பி. ஏ. வகுப்பில் படித்த ஷேக்ஸ்பியரைக் கேட்டால் கூறுவேன். நான் காளிதாஸனைக் கண்டபடி?

ஸா: ஒருவரிடமும் கற்காத ஸாமர்த்யம் ஸ்த்ரீ பறவைகளிடமே உண்டே! ஆறறிவு படைத்த மநுஷ்ய ஸ்த்ரீகள் விஷயத்தில் கேட்கவேண்டுமா? என்றுள்.

கு: எந்த பறவைகளிடம் அப்படி என்ன ஸாமர்த்யமிருக்கிறது?

ஸா: குயில் முட்டையிடும். அவயங்காக்கத் தெரியாது. காக்கை முட்டையுடன் அதைக்கொண்டு வைத்துவிடும். முட்டை குஞ்சாகி கத்த ஆரம்பிக்கும் வரை காக்கை தன் குழந்தை என வளர்க்கும். குயில் கத்துவது பிரஸித்தமல்லவா? அதைக் கேட்டவுடன் காக்கை அதைக் கொத்த ஆரம்பிக்கும். குயில் வந்து தன்குழந்தையை அழைத்துச்செல்லும்.

கு: ஆஹா! கவி வெறுங் கல்பனையோடு நிற்காமல் எவ்வளவு நுட்பமாக பக்ஷிகள் விஷயத்தைக்கூட கவனித்திருக்கிறுர். சரி, பிரகிருதத்தைச் சொல்.

ஸா: உபயபாரதி இருவர்கழுத்திலும் மாலை அணியும்படி செய்து தன் வீட்டு வேலையைக் கவனிப்பாள். மாத்யான்ஹிக காலத்தில் துறவியை பிக்ஷைக்கும் பதியை வைச்வதேவத்திற்கும் அழைப்பாள். இப்படி பலநாள் நடந்தும் ஜயம் அபஜயம் ஒருவருக்கும் ஏற்படவில்லை. இப்படியிருக்க ஒரு நாள் இருவரும் பிக்ஷைக்கு வாருங்கள் என்றழைத்தாள்.

கு: ஆஹாஹா! பதிதோற்றுர். துறவுபூண்டு சிஷ்யனுக வேண்டுமென்று தீர்ப்புகூறியதுபோல் அல்லவோ பிக்ஷைஎன்றுள். கிருஹஸ்தரை வைச்வதேவமென அழைப்பது வழக்கமல்லவா? எப்படி தோல்வியைக் கண்டாள்! அதைக்கூறு.

ஸா: துறவி மாலை வாடவில்லை. பதிமாலை வாடிற்று. பதில் கூற வகையின்றி திகைத்தும் மனங்கலங்கியதால் பதி மாலை வாட அவர் தோற்றுரெனக் கூறினுள்.

கு: எம். ஏ. இல்லை. எம். எல். இல்லை. இப்படி யாருக்கு ஸூக்ஷ்மத்தைக் கண்டுபிடிக்க முடியும். தீர்ப்பு தான் கூறமுடியும்?

ஸா: அதனுல்தான் நம்மவர் உத்தியோகப் படிப்பு படிக்கவேண்டாம் கற்புடனிருந்தால் ஸகலமும் ஸித்திக்குமென்கிறேன்.

---

துலாகட்டம் என்பது மாறி லாக்கடமானது.

Dr. V. K. வெங்கிடசாமி, M. B., B. S., F. I. M.,
1/3, A. D'Sylva Road, Mylapore, Madras-4.

***நவீன மருந்துகள்:***–(1) அதிஸாரத்தின் ஆரம்பத்தில் ஸோடா ஸல்பேட் என்ற பேதி உப்பை 60 கிர. அளவில் 2 மணிக்கொருதரம் 5-6 தரம் சாப்பிட பேதி கட்டும். (2) சாதாரண பேதியில் ஜீரணத்தை விருத்தி செய்யும் கார்மினிடிவ் மிக்சர் நல்லது. (ஸோடா பை கார்பெனெட் 15 கிர. டின்க்சர் கார்டமம்கோ 20 மினிம், டின்க்சர் ஜின்ஜிபெரிஸ் 30 மினிம், ஸ்பிரிட் குளோரபார்ம் 15 மி. பெப்பர்மின்ட் தண்ணீர் விட்டு ஒரு அவுன்ஸாக்கவும். (இது ஒரு வேளைக்கு அளவு). 6 வேளைக்கு 4 மணிக் கொருதரம். (3) பேதி தொடர்ந்து போய்க்கொண்டிருந் தால் கேயாலின் என்ற களிமண் வாஸனையுடைய வெள்ளைப் பவுடரை டீஸ்பூன் அளவில் தண்ணீரில் கலக்கி மணிக் கொருதரம் பேதி நிற்கும்வரைக் கொடுக்கலாம். (4) இதில் பயன் சரியாகத் தெரியாவிடில், ஸல்பா குனி டைன் என்ற மாத்திரைகள் உபயோகமானவை. 2 மாத் திரை 4 மணிக்கொருதரம் தண்ணீரில் சாப்பிடவும். தினம் மும்முறை இரண்டு நாள் சாப்பிடலாம். (5) இதுவும் உபயோகமின்றிப் போயின், என்டரோ வயோ பார்ம் (ஷிபா) என்ற பழுப்பு மாத்திரையைத் தினம் மும்முறை 2 நாள் தண்ணீரில் கொடுக்கவும். அநேகமாய் சாதாரண பேதிகள் இதனால் நின்றுவிடும். நிற்காவிடில் மலத்தைச் சரிவர மைக்ராஸ்கோப்பில் பரிசை்ஷசெய்து டாக்டர்களின் உதவியை நாடவேண்டும். எமடின் இன்ஜெக்ஷன், ஸ்டிரப்டோ மைஸின் போன்ற மருந்துகள் முதலியனத் தேவையாக இருக்கும். ஸ்புரூ என்ற கிரஹணியில், பக்கு வப்படுத்திய பால் ஆகாரம், லிவர் எக்ஸ்ட்ராக்ட் இன் ஜெக்ஷன் ஆகியவை கருத்துடன் டாக்டர்கள் கொடுக்க வேண்டிவரும். தேகத்தில் இதர வியாதிகளிருப்பின் அவற்றிற்கு சிகித்ஸை செய்வது அவசியம்.

***ஔஷத வர்க்கம்: தான்றிக்காய்:***–விபீதகி (வியாதி களின் பயத்தைப் போக்கடிப்பது) என்ற பரியாயப் பெயர்கொண்டது. கஷாயரஸம்-மதுர விபாகம்-ரூக்ஷம்- உஷ்ணம்-மல பேதனம்-சக்ஷுஷ்யம் (கண்ணுக்கு நல்லது) கேஶ்யம் (மயிரை வளர்க்கும்)-கப பித்த ஹரம்-காஸம்,

**யஜமானன்–யாகம் செய்கிறவர். யஜ-தாது.**

கிருமி. ஸ்வர பங்கம், வயிற்றுப் போக்கு, வீக்கம், பல் வலி, இரத்த பித்தம் முதலியவை போம்.

(1) தான்றிக்காய், ஸைந்தவம் (பாறை உப்பு), திப்பிலி சமயிடை, 15 கிர. தினமிருமுறை மோர்விட்டரைத்துக்கொடுக்க தொண்டைக் கம்மல் நீங்கும். (2) தான்றிக்காய்த் தோல் $\frac{1}{2}$ பலம், ஆழாக்கு நீரில் சேர்த்து மூன்றில் ஒன்ருகக் காய்ச்சி $\frac{3}{4}$ பலம் தேன்சேர்த்துக் கொடுக்க சுவாசம் நீங்கும். (3) தான்றிக்காய் தோல் சூரணத்துடன் சரிபாகம் வெள்ளைச் சர்க்கரைக் கூட்டித் தேன் விட்டுப் பிசைந்து ஒரு விராகனிடை சாப்பிட கண்ணுக்கு நல்லது. (4) தான்றிக்காயைச் சுட்டு மேல் தோலைச் சூர்ணம் செய்து, சமயிடை சர்க்கரைச் சேர்த்துத் தினம் இருமுறை ஒரு விராகனிடை வீதம் வெந்நீரில் கொடுக்க பல்வலி தீரும். (5) தான்றிக்காய் கொட்டையினின்று எடுக்கும் எண்ணை வாத பித்த ஹரம், தலைமயிரை வளர்க்கும். (6) இதன் கஷாயத்தை 1 அவு. தேன் கலந்து தினமிருமுறை உட்கொள்ள வாயிலும் தொண்டையிலுமுள்ள புண் தீரும். (7) பருப்பை உரைத்துப் பூசப் புண்கள் ஆறும். (8) தான்றிக்காயை நெய்விட்டு வறுத்து கோதுமை மாவைப் பிசைந்து கவசம் செய்து வெதுப்பி வாயில் அடக்கிக்கொள்ள, இருமல், தொண்டைப்புண், சளி இவை நீங்கும்.

திரிபலா :- கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் சமயிடை சூர்ணம். (1) கஷாயம், புண்களைக் கழுவ அவை ஆறும். (2) தேனில் கலந்து தொண்டைப்புண்களுக்குத் தடவலாம். (3) கஷாயம் கொப்பளிக்க வாய்ப் புண் ஆறும். (4) திரிபலா சூர்ணம் 3 தோ, சூரத் நிலா விரை 1 தோ. கொட்டை திராக்ஷை (கொட்டை நீக்கியது) 1 தோ. தேவையான குல்கந்தைப்போட்டு லேஹ்யமாகச் செய்யவும். $\frac{1}{2}$–1 தோலா இரவில் உட்கொள்ள மலமிளகும். (5) திரிபலா சூர்ணத்தை 30 கிர. தேனில் தினமிருமுறை உட்கொள்ள கப பித்த விருத்தி, மேகம், குஷ்டம், விஷம ஜ்வரம் இவைகளைத் தடுக்கும். ருசி உண்டாகும். ஜீரணம் அதிகரிக்கும். கண் பார்வை நன்ருகும்.

---

பத்நீ–யாகத்தில் பதியுடனீடுபடும் ஸதி.

# நவரஸம்

## 1. ஸாது! ஸாது!!

நவராத்ரி காலம். பக்தர்களும், ரஸிகர்களும் குழுமியிருக்கும் ஒரு பெரிய ஸபை. அங்கே, ஆய கலைகள் அறுபத்து நான்கிலும் சிறந்து விளங்கும் கலைஞர்களைக் காணலாம். அவர்கள் ஒவ்வொருவருக்கும் தங்கள் ஸாமர்த்தியத்தை இந்த ஸபையிலே வெளிப்படுத்த வேண்டுமென்ற ஆவல் உண்டு; திறமையும் உண்டு. ஆனால் ஏனோ அவர்கள் ஒருவருக்கும் அவ்வாறு செய்யத் துணிவு வரவில்லை. அவர்களின் தயக்கத்திற்குக் காரணம், அந்த ஸபையின் திலகமாகத் தலைமை தாங்கிக் கொலுவீற்றிருக்கும் ஸாக்ஷாத் தேவி பராசக்திதான்!

எல்லோரும் இப்படி இருந்து விட்டால் கலை நிகழ்ச்சிகள் நடக்க வேண்டுமே! அதற்காக சற்றுத் துணிச்சலை வரவழைத்துக் கொண்டு வீணையொன்றைக் கையிலேந்தி, அம்பிகையின் எதிரிலே வந்தமர்ந்தாள் ஸகல கலைகளுக்கும் உறைவிடமான ஸரஸ்வதி தேவி. தன் பாட்டிலே குறைபாடு இருந்தாலும், ஸாஹித்யச் சிறப்பினாலாவது தேவியை வசப்படுத்தலாம் என்ற நம்பிக்கையில் அன்னையின் மனதை நெகிழவைக்கும் பசுபதியின் குணங்களையே விஷயமாக வைத்துக்கொண்டு பாடினாள் கலைவாணி. கல்லையும் உருகவைக்கும் வண்ணம் அற்புதமாகவே பாடினாள். மெய்மறந்து, கண்களில் நீர் மல்க, கானத்திலே லயித்தார்கள் ஸபையோர்கள். அன்னைக்கும் பரம ஆனந்தம்; ஸரஸ்வதிக்கும் ஒரே உற்சாகம். மேலும் மேலும் அம்ருத ரஸத்தை வாரியிறைக்கிறாள்! இந்த ருசியான கட்டத்தில் தான் ஒரு ஆச்சரியம் நடந்தது.

மிகவும் ரஸமானதொரு இடத்தில் அன்னை தன் சிரத்தைச் சற்று ஆட்டிக்கொண்டாள்; அவள் வாக்கிலிருந்து பாராட்டும் எண்ணத்தோடு ''ஸாது! ஸாது!!'' (நல்லது! நல்லது!) என்ற வார்த்தைகளும் தோன்றின! அன்னை அந்த வார்த்தைகளைச் சொல்ல ஆரம்பித்த உடனேயே, எதிர் பாராததொன்று நிகழ்ந்துவிட்டது!

---

பண்டா - பண்டாரம். பண்டிதர் - க்ஞானி.

இது வரை தன்னை மறந்து பாடிக்கொண்டிருந்த ஸரஸ்வதி, அன்னையின் வாக்கைக் கேட்டவுடன் சட்டென்று தன் கானத்தைப் பாதியிலே நிறுத்தி விட்டாள்; அவள் முகம் குங்குமமெனச் சிவந்து விட்டது; வீணையின் ஒலி நின்று விட்டது; உறையினுல் வீணையை மூடிவைத்து விட்டுத் தலை குனிந்து நின்ருள்! ஏன்? ஏன் இந்த விபரீதம்?? யாருக்குமே தெரியவில்லை. ஸபையோர்கள் விழித்தார்கள். காரணம் தெரிந்தவர்கள் மூன்றேபேர்கள். ஸரஸ்வதி, அன்னை பராசக்தி என்ற இந்த இருவர்களைத் தவிர மூன்ருமவர், தனது மெய்யுணர்விஞல் இந்தக் காட்சியைக்கண்டு அனுபவித்த ஆதி சங்கரர் ஆவர். தமது ஒப்பற்ற ஸௌந்தர்ய லஹரியில் இதன் காரணத்தைச் சொல்கிருர்! வாருங்கள், கேட்போம்!

विपञ्च्या गायन्ती विविधमपदानं पशुपतेः
त्वयारब्धे वक्तुं चलितशिरसा साधुवचने ।
तदीयैर्माधुर्यै रपलपिततन्त्री कलरवां
निजां वीणां वाणी निचुलयति चोलेन निभृतम् ॥

விபஞ்ச்யா காயந்தீ விவிதமபதானம் பசுபதேः
த்வயாரப்தே வக்தும் சலிதசிரஸா ஸாது வசனே ।
ததீயைர் மாதுர்யைः அபலபித தந்த்ரீ கலரவாம்
நிஜாம் வீணும் வாணீ நிசுளயதி சோளேன நிப்ருதம் ॥

அன்னையின் 'ஸாது' என்ற வாக்கைக் கேட்டவுடன், தன்னைப் பாராட்டுகிருள் தேவி என்று நினைப்பதற்குப் பதிலாக, மேதையின் உருவான ஸரஸ்வதி வேறு மாதிரி அதை உணர்ந்தாள்! "அடாடா! எனது அல்ப புத்தியை என்ன வென்று சொல்வது! மதுரமான கானம், ஸங்கீத ஞானம், வீணையின் நாதம், உயர்ந்த ஸாஹித்யம் இத்தனையையும் அரும்பாடுபட்டு ஒன்ருக இழைத்து, இனிமையென்று ஒன்றை உண்டாக்கவேண்டும், தேவியை மகிழ்விக்க வேண்டும் என்று வீண் எண்ணம் கொண்டேனே! "ஸாது" என்று அன்னை அனுயாஸமாகச் சொன்ன சொல்லிலே உள்ள இனிமை, அவள் குரலிலே காணும் மாதுர்யம், இவைகளில் ஆயிரத்தில் ஒரு பங்கு கூட எனது கானத்தில் இல்லையே! அதற்கு இது உறை

---

பைராகீ என்ருல் வைராக்யமுள்ளவர்.

போடக்கூடக் காணுதே!'' இப்படி எண்ணியவளாய் வீணைக்கு உறை போட்டு மூடிவிட்டாளாம் ஸரஸ்வதி!

  

## 2. தலையே போகட்டுமே!

பாராட்ட வேண்டுமென்று சொன்ன சொல் பாட்டையே நிறுத்தி விட்டதைப் பார்த்தோமல்லவா? இப்படித்தான் ஒரு ஸமயம் திருவிதாங்கூர் ஸமஸ்தானத்தில் அரச ஸபையில் ஒரு நிகழ்ச்சி நடந்ததாம்! ஸங்கீத மேதையான ராஜா பல வித்வான்களை ஆதரித்து வந்தார். புதியதாக ராகவன் என்ற ஒரு இளம் பாடகர் ஸபைக்கு அழைக்கப் பட்டிருந்தார். அவருடைய கச்சேரி நடந்து கொண்டிருந்தது. அருளினல் இளம் வயதிலேயே அபாரமான ஞானத்தோடு பாடக்கூடிய இளைஞரின் கானத்தை ராஜா பெரிதும் ரஸித்துக் கொண்டிருந்தார். இதர வித்வான்கள் அரசருடைய ஈடுபாட்டைக் குறிப்பால் அறிந்து, தாங்களும் மிகவும் ரஸிப்பதாகக் காட்டிக்கொண்டார்கள். ஒருவருக்கொருவர் போட்டியிட்டுக் கொண்டு "பலே! பேஷ்!, ஸபாஷ்!'' என்று கோஷமிடுவதைப் பொறுத்துப் பார்த்த மன்னர், இனிப் பொறுக்கமுடியாதென்று தெரிந்து, மந்திரியைக் கூப்பிட்டு, ''யாராவது தலையை ஆட்டினலோ, சப்தமிட்டாலோ கடும் தண்டனை கொடுப்பேன்! நல்ல ஸங்கீதத்தை ரஸிக்க முடியாமல் செய்பவர்களுக்கு சிரஸாக்கினை கூட விதிக்கலாம்!'' என்று தான் உத்தரவிட்டிருப்பதாக அறிவிக்கச் சொன்ஞர். அடுத்த நிமிஷம் ஒரே நிசப்தம்! ஏன் மூச்சு விடுகிருர்கள்? கச்சேரி அமைதியாகத் தொடர்ந்து நடந்து கொண்டிருந்தபோது திடீரென்று ஒரு மூலையில் "சபாஷ்! ராகவா!! தலையே போனலும் சபாஷ்!!! என்று ஒரு குரல் கேட்டது. குரல்வந்த திக்கை நோக்கிய வித்வான்கள் ஒருவயதான தஞ்சாவூர்க் காரரைக் கண்டார்கள். மிகவும் பரிதாபப் பட்டார்கள். அரசர் அழைத்து வரச்சொன்ஞர், என்றதும் ஜம்மென்று வந்து நின்ருர் அந்தக் கிழவரும். ஒரு பயமோ, தயக்கமோ இல்லை அவரிடம். என்ன தண்டனை விதிக்கப்படுமோ

---

தாரவார்த்தது - கர்மகாண்ட பரிபாஷை.

என்று ஸபையிலே கலக்கம். ராஜா அந்தக் கிழவரைப் பார்க்காமல் ஸபையிலுள்ள வித்வான்களைப் பார்த்துச் சொன்னார் :—

"இன்றுதான் உண்மையான ரஸிகர் ஒருவரை என் ஸபையில் கண்டேன். பாட்டைத் தொடங்கிய உடனேயே பலமாகத் தலையாட்டின நீங்கள் தண்டனை என்ற உடன் அபூர்வமான இடங்களிலெல்லாம் கூட வாய்மூடிக் கிடந்தீர்கள். உங்கள் ஆரவாரமெல்லாம் என்னைத் திருப்திப் படுத்த நீங்கள்போட்ட வெறும் வேஷம் என்று உலகறியச் செய்வதற்காகத் தான் இந்தப் பரீக்ஷை வைத்தேன்! 'தலையே போனாலும் போகட்டும்! பாராட்டியே தீருவேன்'!! என்று சொன்ன ரஸிக சிகாமணிக்குப் பட்டும் பொன்னும் வழங்க உத்தரவிடுகிறேன்!"

இவ்வாறு அரசன் சொன்னதற்குத் தலையாட்டுவதா கூடாதா என்று தெரியாமல் வித்வான்கள் தலை குனிந்து நின்றார்களாம்!

## ஸ்ரீ ஆசார்யாளின் அம்ருத மொழி.

ஸதீ தடுப்புச் சட்டம் 150 வருஷங்களாக அமுலில் இருக்கின்றது. இன்றைக்கும் ஒரு சில ஸதிகள் உயிரை த்ருணமாகக் கருதி தீக்குளிக்கிறார்கள். உண்மையான ஒரு ஸதீ உலகை ரக்ஷிக்கத் தக்க சக்தியுள்ளவள். ஸதீ என்றே தேவிக்கும் பெயர். புஷ்ப பாணத்தை அளித்து உலகெலாம் ஜயிக்கும்படி மன்மதனுக்கு அருள்புரிந்தாள். பரமசிவன் நெற்றிக்கண்ணால் எரித்த காமனிடமிருந்து குமரக்கடவுளை அளிக்க, கரும்பு வில்லையும், புஷ்ப பாணங்களையும் தான் ஏற்றுக்கொண்டாள்.

"மநோரூபேக்ஷு கோதண்டா பஞ்ச தன்மாத்ர ஸாயகா" என்பது தேவீ ஸஹஸ்ரநாம. அன்னையை அண்டினால் அவள் நம்மைக் கைவிடாள்.

ப. சுப்ரமண்யன்,
கதக்.

ஜலம் விட்டே தாம்பூல தக்ஷிணை தரவேண்டும்.

ஐப்பசிமீ ஜோதிஷப் பகுதி.

# கோசாரப்பலன்.

ஜோதிஷபானு E. S. K. ஸ்வாமி, பாரத் கிரஹ ஸஞ்சார ஆசிரியர்,
4, கிருஷ்ணமாசாரி தெரு, தி. நகர், சென்னை-17.

## மேஷ ராசி

அசுவனி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய

குரு அஷ்டமத்திலும், சனி பாக்கியத்திலும், ராகு ஆறிலும், கேது விரயத்திலும் இருக்கிறார்கள். சூரியன் ஏழிலிருக்கிறார். இதனால் சுபவிஷயமான விரயங்கள் ஏற்படும். செய் தொழில் தடைப்பட்டு கூடும். குடும்ப சௌக்கியம் ஏற்படும். வெளியூர் போய் வர நேரும். புதிய முயற்சிகள் கூடிவரும். சில்லரை கொடுப்பல் மூலம் நச்சரிப்பு ஏற்படும். சூரியனை ஆராதிப்பது நலம்.

## ரிஷப ராசி

க்ருத். 2ம் பாதம் முதல் ரோகிணி மிருகசீரிஷம் 2ம் பாதம் முடிய

குரு ஸப்தமத்திலும், சனி அஷ்டமத்திலும், ராகு பஞ்சமத்திலும், கேது லாபத்திலுமிருக்கிறார்கள். சூரியன் ஆறில் இருக்கிறார். இதனால் ஆரோக்யக் குறைவு, வீண்வகையில் செலவுகள், அலைச்சல் ஏற்படுதல், தொழிலில்விரக்தி, நிம்மதிக் குறைவு, பந்துக்களால் கிலேசம் இப்படி ஏற்பட்டு வரும். புண்ணிய காரியங்களில் செலவும் ஏற்படும். நவக்கிரக பிரதக்ஷிணம் செய்வது நலம்.

## மிதுன ராசி

மிருக. 3ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்வசு 3ம்பாதம் முடிய

குரு ஆறிலும், சனிஸப்தமத்திலும், ராகு நான்கிலும், கேது ஜீவனத்திலும் இருக்கிறார்கள். சூரியன் பஞ்சமத்திலிருக்கிறார். இதனால் தாயாதி வகையில் கிலேசம், உத்தியோகத்தில் வருத்தம், சுபச்செலவுகள், அதிகாரி மூலம் வருத்தம், அன்னியர் உதவி நாடுதல், முயற்சி தடைப்படுதல், நம்பி ஏமாறுதல் இப்படி உண்டாகும். விஷ்ணு சகஸ்திர நாம பாராயணம் செய்வது நலம்.

## கடக ராசி

புனர்வசு 4ம் பாதம் முதல் புஷ்யம், ஆயில்யம் முடிய

குரு பஞ்சமத்திலும், சனி ஆறிலும், ராகு மூன்றிலும், கேது பாக்கியத்திலுமிருக்கிறார்கள். சூரியன் சுகத்திலிருக்கிறார். இதனால் இரகசிய சத்துரு மூலம் கவலை, ஆரோக்ய வகையில் செலவு தாமத நடப்புகள் இப்படி ஏற்படினும், வருமான முண்டாகும். பிறர் ஆதரவு ஏற்படும். தொழில் சுகம் ஏற்படும். துர்க்கா ஜபம் செய்தல் விசேஷ நன்மை.

## சிம்ம ராசி

மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய

குரு நான்கிலும், சனி பஞ்சமத்திலும், ராகு தனத்திலும், கேது அஷ்டமத்திலும் இருக்கிறார்கள். சூரியன் மூன்றிலிருக்கிறார். இதனால் செய்தொழிலில் தவக்கம், வரவேண்டியவை தடைப்பட்டுக் கூடுதல், பந்துவால் கிலேசம், புண்ணிய வகையில் செலவு, பெரிய மனுஷ்யர்களின் நேசம் இப்படி ஏற்படும். லலிதா ஸஹஸ்திரநாம அர்ச்சனை செய்வது நலம்.

---

**ஒருவருக்குத் தக்ததை நாம் தொடக்கூடாது.**

## கன்னியா ராசி

### உத்திரம் 2ம் பாதம் முதல் ஹஸ்தம் சித்திரை 2ம் பாதம் முடிய

குரு மூன்றிலும், சனி சுகத்திலும், ராகு ராசியிலும், கேது ஏழிலுமிருக்கிருர்கள். சூரியன் குடும்பத்திலிருக்கிருர். இதனுல் வருமானத் தடை, ஆரோக்யக் குறைவு, அதிக செலவுகள், தொழிலில் சிக்கல், வீண் கவலைகள், பந்துவால் கிலேசம், நம்பி ஏமாறுதல், புண்யவகை செலவுகள் இப்படி ஏற்படும். அம்பாளை ஆராதிப்பது சிரேஷ்டம்.

## துலா ராசி

### சித். 3ம் பாதம் முதல் சுவாதி விசாகம் 3ம் பாதம் முடிய

குரு தனத்திலும், சனி மூன்றிலும், ராகு விரயத்திலும், கேது ஆறிலும் இருக்கிருர்கள். சூரியன் ராசியில் இருக்கிருர். இதனுல் ராஜாங்கக் கவலை, தேக சுகக் குறைவு, வெளியூர் போய் வருதல், முயற்சி தடையாதல், குடும்பச் செலவு மிகுதியாதல் இப்படி ஏற்படினும் வருமானம் ஏற்பட்டு வரும். தக்ஷிணு மூர்த்தி அஷ்டோத்ர பாராயணம் செய்துவர நலம்.

## விருச்சிகராசி

### விசாகம் 4ம் பாதம் முதல் அனுஷம் கேட்டை முடிய

குரு ராசியிலும், சனி தனத்திலும், ராகு லாபத்திலும், கேது பஞ்சமத்திலுமிருக்கிருர்கள். சூரியன் விரயத்திலிருக்கிருர். இதனுல் சில்லரைக் கடனுல் கிலேசம், சிலரிடம் விவாதமுண்டாதல், தன் சொல்லே பகையாதல், குடும்ப நடப்பில் கவலை, வீண் பிரயாசைகள் ஏற்படுதல் இப்படியாக உண்டாகும். சுப்ரமண்யருக்கு அர்ச்சனை, அபிஷேகம் செய்வது நலம்.

## தனுர் ராசி

### மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய

குரு விரயத்திலும், சனி ராசியிலும், ராகு பத்திலும், கேது நான்கிலும் இருக்கிருர்கள். சூரியன் லாபத்திலிருக்கிருர். இதனுல் குடும்பச் செலவுகள் அதிகமாகும். வரவேண்டியவை தடைப்பட்டுக் கூடும். அதிகாரியால் கவலை. அலைச்சல் மிகுதியாதல், தேக சுகக்குறைவு, வீண் முயற்சிகள், சினேகப் பகை இப்படி ஏற்படும். சனி ஸ்தோத்திரம் தினமும் பாராயணம் செய்து வர நலம்.

## மகர ராசி

### உத்திரா. 2ம்பாதம் முதல் திருவோணம், அவிட். 2ம்பாதம் முடிய

குரு லாபத்திலும், சனி விரயத்திலும், ராகு பாக்கியத்திலும், கேது மூன்றிலுமிருக்கிருர்கள். சூரியன் ஜீவனத்தில் இருக்கிருர். இதனுல் கொடுப்பல் நிர்ப்பந்தம், சிலருக்கு இடமாற்றம் அல்லது வெளியூர் போய்வருதல், வரவுக்கு மிஞ்சிய செலவுகள், மறைமுகமான தூஷணை கேட்டல், அதிகாரியால் கவலை, நிர்ப்பந்தம் இப்படி ஏற்படும். சனிக்கிழமை தோறும் பிறருக்கு அன்னம் போடவும்.

## கும்பராசி

### அவிட்டம் 3ம் பாதம் முதல் சதயம், பூரட். 3ம் பாதம் முடிய

குரு ஜீவனத்திலும், சனி லாபத்திலும், ராகு அஷ்டமத்திலும், கேது தனத்திலும், இருக்கிருர்கள். சூரியன் பாக்கியத்திலிருக்கிருர். இதனுல், புதிய முயற்சிகள் கைகூடும். செய்தொழிலில் நன்மை ஏற்படும். சினேக ஆதரவு உண்டாகும். பெரியோர் நேசம், சிலபொருள் வாங்குதல் இப்படி ஏற்படும். கோ பூஜை வாரம் ஒருமுறைசெய்ய தனம் விருத்தியாகும்.

---

**மீன ராசி**

**பூரட்டாதி 4ம் பாதம் முதல் உத்திரட்டாதி, ரேவதி முடிய**

குரு பாக்கியத்திலும், சனி ஜீவனத்திலும், ராகு ஏழிலும், கேது ராசியிலும் இருக்கிறார்கள். சூரியன் அஷ்டமத்திலிருக்கிறார். இதனால் ராஜாங்கக் கவலை ஏற்படல், வீண்வகையில் செலவு, சில பொருள் விற்றல், குடும்ப சுகம், புதிய ஏற்பாடுகள் உண்டாதல், சினேக ஆதரவு, தொழில் மேன்மை ஏற்படுதல், சுப விஷயமாய்ச் செலவுகள் இப்படியாக ஏற்படும். லக்ஷ்மி அஷ்டோத்திரம் செய்துவர மேன்மை.

## ஸந்தேஹ விளக்கம்.

**N. ராமசந்த்ரய்யர், பெங்களூர்.**

***1. கேள்வி: லௌகிகாக்நி என்பது ஏது?***

***பதில்:—1. த்ரேதாக்நி:*** இது யாகம் செய்கிறவர் உபயோகிக்கும் கார்ஹபத்யம், ஆஹவநீயம், தக்ஷிணாக்நி என்பதாம். ஸ்ரௌதாக்நி என்றும் கூறுவர்.

***2. ஏகாக்நி, ஸ்மார்தாக்நி*** எனப்படுவது, கிருஹஸ்தர் விவாஹத்தில் ஆரம்பித்து, என்றும் இரு வேளையிலும் ஹோமம் பண்ண வேண்டிய ஔபாஸனாக்நி. ஸ்தாலீ பாகம், ஸர்ப்பபலி, ஸீமந்தம், பித்ரு மாத்ரு ஸ்ராத்தம் முதலியவைகளுக்குப் பயன்படுவதாம்.

***3. லௌகிகாக்நி:*** நவக்ரஹ ஹோமம், ஆயுஷ்ய ஹோமம், ஆவணியாவிட்டம் முதலியவைகளைச் செய்யப் பயன்படும் அக்நியே லௌகிகாக்நி எனப்படும். இதை ஹோமம் ஆனவுடன் அப்புறப் படுத்தலாம். முதல் இரண்டுகளையும் அந்தந்தஹோமம் ஆனபின்புகுண்டானில் வைத்து ரக்ஷிக்க வேண்டும். இன்ன இன்ன கர்மாவை இந்த இந்த அக்நியில் செய்யவேண்டும் என சாஸ்த்ரம் கூறுகிறது.

■ ■ ■ ■

**விஸ்வநாதய்யர், கல்யாண், பாம்பே.**

***2. கே: கூஶ்மாண்ட ஹோமம் என்றாலென்ன?***

***ப:*** கூஶ்மாண்ட லேஹ்யம் என்று கேள்விப்பட்ட சிலர் பூஷிணிக்காயால் ஹோமம்செய்வதோ என தவறாக நினைப்பர். "தான் அஶுத்தனாகியதால் சுத்தனாகவேண்டுமென விரும்புகிறவன் கூஶ்மாண்ட ஹோமம் செய்ய வேண்டும் என வேதம் கூறுகிறது. சில மந்த்ரங்களுக்கு

---

**ஆசுதோஷர் அஸுடோஷ் என்றாயிற்று.**

கூஶ்மாண்டம் என்று பெயர். யாகம், வைஶ்வதேவம், பெற்றோர் ஶ்ராத்தம் ஆகிய கர்மாக்களை ஆரம்பிப்பதற்கு முன் இதைச் செய்வார்கள் [அருணம் 2, ப்ரஶ்நம் 3 அநுவாகம், கூஶ்மாண்ட மந்த்ரம்]

■ ■ ■

**R. ராமசந்த்ரன், மைலாபூர்.**

**3. கே: பிரம்மசாரி மஹாளயம் செய்யலாமா ?**

ப: பிரும்மசாரிக்கு ஸ்மார்தாக்நி இல்லை. மஹாளயாதிகள் ஸ்மார்தாக்நியில்தான் செய்யவேண்டும். ஆதலால் மகாளயத்தை பிரும்மசாரிகள் அன்னரூபமாக சிலவிடத்தில் செய்வதில்லை. பெற்றோரின் ஶ்ராத்தம் செய்வது வழக்கம். அதுபோல் மஹாளயம் அல்லது அதற்குப் பிரதிநிதியாக ஹிரண்ய ஶ்ராத்தம் செய்ய வேண்டியது அவசியமாகும்.

■ ■ ■ ■

**A. சுப்ரமண்யன், தூத்துக்குடி.**

**4. கே: ஸ்ரீ ருத்ரத்தைப் பகலுக்கு மேலும் இரவிலும் பாராயணம் செய்யலாமா ?**

ப: கூடாது. ஆனல் ஸ்வாமிக்கு அபிஷேகம் செய்வது, காம்யமான கர்மாங்கமாகச் செய்வதை இரவிலும் செய்யலாம். குற்றமில்லை. தனி ஜபமாக அதைமாத்ரம் பாராயணம் செய்வது கூடாது.

■ ■ ■ ■

**பரம ஆஸ்திகரான ஒரு சந்தாதாரர்:**

**5. கே: ஆயுஷ்யஸூக்தத்தை, அதில் நெய்யை ஹோமம் செய்கிறேன் என வருவதால் ஜபம் மாத்ரம் செய்வது ஸ்வாமியை ஏய்ப்பதுபோ லிருப்பதால் பாராயணம் செய்யலாமா ?**

ப: வேதமந்த்ர மெல்லாமே பெரும்பாலும் யாகத்தில் தேவர்களை அழைப்பதாகவும், ஹோமம் செய்வதாகவுமே இருக்கும். பாராயணம் செய்தால் ஹோமம் செய்த பலனில் சிறிதுவரும் என வேதமே கூறுகிறது. காயத்ரி அர்த்தம் த்யாநம் செய்கிறேன் என்றுளது. அதை ஜபம் செய்கிறோம். தியாநம் செய்வதில்லை. செய்தால் விசேஷம்.

---

**ஆசுதோஷர் எனில் விரைவில் ஸந்தோஷிக்கும் சிவன்.**

# கல்கி புராண

# அவதாரிகை.

மஹா புராணங்கள் பதினெட்டு. அதேபோல் உப புராணங்களும் பதினெட்டு. 1. ஸநத்குமாரம், 2. நாரசிம்மம், 3. ஸ்காந்தம், 4. ஶிவதர்மம், 5. நந்தி, 6. தூர்வாஸம், 7. நாரத, 8. காபில, 9. மாநவ. 10. ஔஶநஸ, 11. பிரும்மாண்ட, 12. வாருண, 13. காளி, 14. மாகேஶ்வர, 15. கல்கி, 16. ஸாம்ப, 17. பராசர, 18. மாரீச என்பன. மற்றும் 18 உபபுராணங்களுமிருக்கின்றன.

பெரும்பாலும் பல புராணங்கள் ஏட்டுச்சுவடியில் இருந்தன. அவைகளை அச்சிடாததால் வெகுகாலம் அவைகளை ரக்ஷிக்க முடியாமல் தஞ்ஜை ஸரஸ்வதி மஹாலில் எண்ணிறந்த சுவடிகள் ஆண்டுதோறும் வெளியேற்றப் படுகின்றன. வடநாட்டிலுள்ள சில தார்மிகர் புராண புத்தகங்கள் லாபகரமாக விற்பனையாகாதென உணர்ந்தும் மஹா புராணங்களையும் உப புராணங்களையும் அச்சிட்டனர். [அந்தவகையில் உபபுராணங்களில் முதலாவதாக பார்க்கவ புராணமெனும் கணேஶ புராணத்தை மாதம் கொஞ்சமாக நமது பத்ரிகையில் வெளியிட்டு ஒருவாறு பூர்த்தி செய்தோம். அடுத்தபடி கல்கி புராணத்தை அதே போல் வெளியிடுகிறோம்.]

பல லைப்ரரிகளில் தேடியும் பூர்ணமாக கல்கிபுராணம் கிடைக்கவில்லை. சிலசில அத்யாயங்களே கிடைத்தன. அவைகளும் ஏட்டுச் சுவடியில்தானிருந்தன. கல்கி அவதாரம்பற்றி மஹாபுராணம் பலவற்றிலும் கூறப்பட்டாலும் அவை மிகமிகச் சுருக்கமாயிருக்கின்றன. எனினும் கல்கிபகவானுக்குச் சிறப்பாக அமைந்த புராணம் அகப்படவில்லையே என்று பலமுறை பல இடங்களில் தேடி அலைந்தோம். ஹேமலம்பவருஷம் பாம்பே ஸ்ரீ சங்கர மடத்தில் ஸ்ரீ சங்கர ஜயந்திக்குச் சென்றபொழுது பதினெண் புராணங்களை அச்சிட்ட அச்சாபீஸ் சென்று

தேடினல் அங்கும் கல்கி புராணம் கிடைக்கவில்லை. இந்த வெங்கடேசா ஸ்டீம் பிரஸ்ஸைச் சார்ந்த ஒருவர் பாம்பே கல்யாணில் லக்ஷ்மீ வெங்கடேஶ்வர பிரஸ் என்ற பெயரில் ஒன்று வைத்திருப்பதாகக் கேள்விப்பட்டு அங்கு நண்பர் களைக்கொண்டு தேடியதில் கல்கி புராணம் கிடைத்தது.

அது 1954ஆம் ஆண்டு ஆஶ்வின க்ருஷ்ணபக்ஷ திருதீயை திதியில் ஸோமவாரத்தில் அச்சிடப்பட்டது. அதை அச்சிட்ட கங்காவிஷ்ணு ஸ்ரீ கிருஷ்ணதாஸ் என் பவர் ஹிந்தியில் மிகச் சுருக்கமாக ஒரு விக்ஞாபநம் எழுதியிருக்கிறார். அதில் "இது மிக ஆஶ்சர்யமான புராணம்! நான்குவித புருஷார்த்தங்களுடன், பூகோளம், மநித சரிதம் முதலியவைகளை நேரில் நடித்துக் காட்டுவது போலுள்ளது! நான்கு ஆஶ்ரமிகளும் பாராயணம் செய்யத் தக்கது! பிராம்மண குலத்தில் அவதரித்து, தர்ம த்ரோஹிகளான துஷ்ட அரசர்களை வதம் செய்து, ஸத்ய யுகமான க்ருதயுகத்தை ஆரம்பித்தது, ஸகல ஆஶ்ரமங்களையும் ஆஶ்ரமதர்மங்களையும் எடுத்துக்காட்டு வது, தீர்த்த யாத்திரை செய்பவருக்கு வழி காட்டுவது போன்ற பற்பல ஆஶ்சர்யமான விஷயங்கள் இதில் அமைந்திருக்கின்றன! இதைத் தேடிப் பிடிக்க ஊர் ஊராகப் பண்டிதர்களை அனுப்பி, லக்ஷம் ரூபாய் செலவு செய்து, இதை அச்சிட்டோம்! ப்ரம்ம ஸ்வரூபியான பகவான் நித்யாநந்தமான வைகுண்டத்தை விட்டு, தர் மத்தை ரக்ஷிப்பதற்காக மநம் இளகி பூமியில் அவதரிக்கப் போகிறார்! அவரது திவ்ய சரிதம் ஆஸ்திகர் மநதை ஆகர்ஷிக்கும்" எனக் கூறுகிறார்.

முராதாபாத் பலதேவப்ரஸாத் மிச்ரா என்பவர் இதற்கு விரிவான முகவுரை எழுதினர். அதில் "புராணங்களில்" ஒரே கதை பலமாதிரியாக வர்ணிக்கப் படுவதால் வேதவ்யாஸரே இவைகளுக்குக் கர்த்தா என் பது தவறு. பலர் இதை எழுதி, வ்யாஸர் பெயரை வைத்தார்கள் என்ற வாதத்தைக் கண்டித்து வ்யாஸரே எல்லாவற்றையும் எழுதியவர். சிஷ்யர்கள் பலர் பிரசாரம் செய்தனர். யுகபேதத்தால் கதைகள் சிறிது வேறுபட்டாலும் முக்யமான அம்சம் ஒன்றே என்றும் வேத வ்யாஸர் வேதங்களைப் பிரித்து பாரதம், 18 புரா ணம், உப புராணங்களையும் எழுதி உலகிற்கு பேருப காரம் செய்தாரென்றும் கலியுகம் பிறந்து 653 வது

வருஷத்தில் பாண்டவ கௌரவ யுத்தம் நடந்ததென்றும், அச்சமயம் வேதவ்யாஸர் இருந்தாரென்றும், அவர் இயற்றிய கல்கி புராணம் ஆறு ஆயிரம் சுலோகமுள்ளதென்றும், அவை பூரணமாகக் கிடைக்கவில்லை என்றும், வெங்கடேசா ஸ்டீம்பிரஸ் சொந்தக்காரர் கல்கி புராணத்தை ஹிந்தியில் எழுதி வெளியிட்டார் என்றும், இங்கு கிடைத்த 1366 சுலோகங்களை ஹிந்தி அநுவாகத்துடன் வெளியிடுவதாகவும், ஆராய்ச்சி முறையில் விரிவாக எழுதினர். (அச்சிட்ட நூலில் இவரது ஹிந்திவியாக்யானமிருக்கிறது.)

நாராயணனின் அவதாரமான வியாஸர் ஸர்வக்ஞர். ஆதலால் கலியில் வரப்போகும் விஷயங்களை எல்லாம் கண்டறிந்து பவிஷ்ய புராணம் கூறியதுபோல் பகவான் விஷ்ணு யஶஸ் ஸுமதி என்பவரிடம் கல்கியாக அவதரிக்கப்போவதையும் மஹாலக்ஷ்மி ஸிம்ஹள த்வீபத்தில் ராஜகுமாரியாக அவதரிக்க, அவளைப் பகவான் மணந்து கொள்ளப்போவதையும், பிராம்மணவதாரமாக இருந்தும் குதிரை மீதேறி கத்தி ஏந்தி துஷ்டர்களைக் கொன்று, ஸூர்யவம்சத்தில் உண்டாகப்போகும் மரு என்பவரையும் சந்த்ர வம்ஶத்தில் தோன்றும் தேவாபி என்ற அரசரையும் ப்ரதிஷ்டை செய்து தந்தைக்கு ராஜஸூய யாகம் செய்வித்துத் தான் வைகுண்ட ஆரோஹணம் செய்யப் போவதாகவும் கூறுகிறார். ராமாவதார கிருஷ்ணவதாரங்களைப் பாராயணம் செய்வதுபோல் கல்கிபுராணத்தையும் பாராயணம் செய்தால் ஸகல பாபங்களும் அகலும். ஸர்வ ஶ்ரேயஸ்ஸும் உண்டாகும் என்று முடிக்கிறார்.

இதில் ஸ்ரீராம கதை கிருஷ்ணசரிதம் கூறப்படுகிறது. இதை ப்ரதமாம்ஶம் த்விதீயாம்ஶம் த்ருதீயாம்ஶம் என மூன்று அம்ஶங்களாக வகுக்கிறார். முதல் அம்ஶத்தில் ஏழே அத்யாயங்கள். த்விதீயாம்ஶத்தில் ஏழு. மூன்றாவதம்ஶத்தில் இருபத்தோரு அத்யாயங்களும் உள. நடுத்தரமான ஸைஸ் உள்ள 356 பக்கம் உள்ளது அச்சான கல்கி மூல புராணம். பெரும்பாலும் பிரதி ஶ்லோகத்திற்கும் அர்த்தம் எழுதுகிறோம். பக்தரில்—ஆஸ்திகரில்—ஒருவர் இதைக்கண்டு உள்ளங் குளிர்ந்தால் நாம் படும் ஶ்ரமம் ஸபலமாகும். ஸ்ரீ பாகவத உபபுராணமிது.

ஓம் நமோ பகவதே வேதவ்யாஸாய.

ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா.

## கல்கி புராண

# விஷய அட்டவணை.



### முதல் அம்சம்

## இரண்டாம் அம்சம்.

## மூன்ரும் அம்சம்.

**கல்கி புராண விஷய அட்டவணை முற்றிற்று.**





# ஸ்ரீ கல்கி புராணம்.



यद्दोर्दण्ड कराल सर्पकबल ज्याला ज्वलद्विग्रहाः
नेतुः सत्करवाल दण्ड दलिताः भूपाः क्षितिक्षोभकाः ।
शश्वत् सैन्धववाहनः द्विजजनिः कल्किः परात्माहरिः
पायात्सत्य युगादिकृत्सभगवान् धर्मप्रवृत्तिप्रियः ॥

யத்தோர்தண்ட கரால ஸர்பகபல ஜ்வாலா ஜ்வலத்விக்ரஹா:
நேது: ஸத்கரவால தண்ட தளிதா: பூபா: க்ஷிதிக்ஷோபகா: |
சச்வத் ஸைந்தவ வாஹந: த்விஜஜநி: கல்கி: பராத்மாஹரி:
பாயாத்ஸத்ய யுகாதிக்ருத்ஸ பகவான் தர்மப்ரவ்ருத்தி ப்ரிய: ||

தனது பாஹுதண்டமெனும் கொடிய ஸர்ப்பத்தின் விஷஜ்வாலையால் துஷ்ட க்ஷத்ரியர்களை விழுங்கி தர்மத்தை அழிப்பதால் பூமிக்குத் துன்பமூட்டும் பிரஷ்டர்களைத் தன் கத்திக்கு இரையாக்கியவரும் குதிரை வாஹநமுள்ளவரும் பிராம்மணகுலத்தில் பிறந்தவருமான (பிறக்கப் போகின்ற பகவான் கல்கி கிருதயுகத்தை ஆரம்பித்து தர்ம பிரவிருத்தியில் பிரியமுள்ளவராய்க் கொண்டு நம்மைக் காக்கட்டும்.

நைமிஶாரண்யத்தில் வஸிக்கும் ஶௌநகர் முதலிய மஹர்ஷிகள் ஸூத புராணிகரை வணங்கி லோமஹர்ஷண புத்ரரும் ஸர்வ தர்மங்களையுமறிந்தவருமான ஓ ஸூதரே! முக்காலத்தையும் ஸர்வ புராணங்களையு மறிந்த நீர், பகவத் கதையைக் கூறும். கலி என்பது யார்? எங்குண்டானவர்? ஸகல ஜகத்திற்கும் பிரபுவாகி ஸகல நித்ய தர்மங்களையும் எப்படி அழித்தான்? என்று கேட்டார்கள். இதைக்கேட்டு பகவானை த்யாநம் செய்து ஸந்தோஷத்தால் உடலெல்லாம் புளகாங்கிதமாக அந்த மஹர்ஷிகளைப் பார்த்துக் கூறினார் ஸூதர். இனி வரப் போகின்ற பரம அத்புதமான கதையைக் கேளுங்கள்! முன்னர் இதை பிரும்மா தன்னை வணங்கிக் கேட்ட நாரதருக்குக் கூறினார். நாரதர் அபரிமிதமான தேஜஸ் உள்ள ஸ்ரீவேதவ்யாஸருக்கு உரைத்தார். அந்த வியாஸர் புத்திமானான தன் புத்ரன் பிரும்மராதனுக்கு (சுகனுக்கு) உரைத்தார்.

சுகர் அபிமன்யு புத்ரனான விஷ்ணுராதன் என்ற பரீக்ஷித்துக்கு உபதேசித்தார். பதினெட்டாயிரம் சுலோக

முள்ள பாகவதம் முடிந்தவுடனே பரீக்ஷித் ஏழாவது நாளில் இறந்தான். மிகுதி உள்ள கேள்விகளுக்குப் பதில் கூறும் படி மார்க்கண்டேயர் முதலிய முநிவர் கேட்க புண்யா ஶ்ரமத்தில் ஸூத புராணிகர் கூறினர். ஶுகர் பரீக்ஷித்திற் குக் கூறும்பொழுது நான் அவரது ஆக்ஞையைப் பெற்று வரப்போகின்ற புண்யமான பகவத் கதைகளைக் கேட் டேன். அவைகளை உங்களுக்குக் கூறுகிறேன் கேளுங்கள். ஸத்விஷயமானதால் அஶ்ரத்தையின்றி ஊக்கமாகக் கேட்கவேண்டும். பகவான் கிருஷ்ணவதார பயன் முடிந் தவுடன் ஸ்வஸ்தானமான வைகுண்டம் சென்றார் அல்ல வா? அப்போது கலி உலகில் புகுந்து தனது செயலை ஆரம்பித்து விட்டான்.

பிரளயம் முடிந்து மறுபடி உலகைப் படைக்க ஆரம் பிக்கும் பொழுது சதுர்முகன் தனது கோரமான மலிந மாயுள்ள பாபத்தைக் கொண்டு பின்புறத்திலிருந்து ஒரு புருஷனைப் படைத்தார். அவனே அதர்மம் எனப்படுப வன். அதர்மத்தின் வம்ஶத்தைக்கேட்டாலும் படித்தாலும் நினைத்தாலும் ஸர்வ பாபங்களும் அகலும். அதர்மத்தின் மனைவி மித்யா என்பவள். அவள் அதர்மத்திற்கு மிகவும் ப்ரியமானவள். பூனைக் கண் உள்ளவள். இவர்களுக்குத் தம்பன் என ஒரு புத்ரன் பிறந்தான். அவன் மிக கோப முள்ளவன். அவனது ஸகோதரி மாயை என்பவள். அவ ளிடம் தம்பன்; லோபன் என்ற புத்ரனையும் கபடம் (நிக் ருதி) என்ற பெண்ணையும் உண்டு பண்ணினன். லோபன் நிக்ருதியிடம் கோபம் என்ற புத்ரனையும் ஹிம்ஸை என்ற புத்ரியையும் உண்டு பண்ணினன்.

கோபம் ஹிம்ஸையினிடம் கலி என்பவனை உண்டு பண்ணினன். அவன் எண்ணெய் கலந்த மைபோன்ற கருத்த திருமேனி உள்ளவன். சிற்றின்பத்திற்கு முக்ய மான அவயவத்தைத் தனது கையால் தரித்திருப்பான். காக்கைப் போன்ற வயிறு, பயங்கரமான முகம், சஞ்சல மான நாக்கு, பயங்கரமான உருவம், துர்கந்தம் இவைகள் உள்ளவன். சொக்கட்டானடுதல், மதுபானம், பெண்கள் ஸுவர்ணம் ஆகியவைகள் அவனுக்கு ஓய்வெடுத்துக் கொள்ளும் ஆநந்தமான இடம். இந்த கலியின் ஸகோதரி துருக்தி என்பவள். (கெட்டபேச்சு) அவளிடம் கலி பயம் என்ற பிள்ளையையும் மிருத்யு என்ற பெண்ணையும் உண்டுபண்ணினன். பயமும் மிருத்யுவும் சேர்ந்து நரகன்

என்ற புத்ரனை உண்டு பண்ணினர். நரகம் என்பவன் தனது ஸஹோதரியான யாதனை என்பவளிடம் லக்ஷக் கணக்கான புத்ரனை உண்டு பண்ணினன்.

இப்படி கலியின் குலத்தில் தர்மத்தை நிந்திக்கக்கூடிய அநேகர் உண்டானார்கள். யாகம் அத்யயநம் தாநம் முதலிய வேத விஹித கர்மாக்களை நாசம் செய்கிறவர்கள், மநக்கவலை நோய் கிழத்தநம் களைப்பு துக்கம் சோகம் பயம் முதலியவைகளைத் தம் ஸ்வபாவ குணமாகக்கொண்டவர்கள், இவர்கள் கலிராஜனை அண்டி கூட்டம் கூட்டமாகச் சென்று உலகை நாசம் செய்கிறார்கள். அதனால் மானிடர் பிரஷ்டர்களாகவும் அல்பாயுஸ்களாகவும் காம வெறி கொண்டவர்களாகவும் ஆகின்றார்கள். உலகிற்கு பகட்டாக ஆசாரத்தை அநுஷ்டிப்பார்கள். ஸதாசாரத்தை விட்டு துராசாரத்தை கைகொள்வார்கள். தாய் தந்தைகளை ஹிம்ஸிப்பார்கள். த்விஜர் என்ற முவ்வர்ணத்தாரும் வேதத்தை அத்யயநம் செய்ய மாட்டார்கள். அதனால் செல்வ மிழந்து ஏழைகளாகி ஸதா நீசர்களை ஸேவித்துக் கொண்டிருப்பார்கள். குதர்க்க வாதம் செய்பவர்கள் அதிகமாக இருப்பார்கள். தர்ம சொத்துக்களையும் தாம் செய்த தர்மத்தையும் விற்று அந்தப் பொருளைக்கொண்டு ஜீவிப்பார்கள். மிக அதர்மர்களாக இருப்பார்கள். தான் கற்ற வேதத்தை பிரும்மயக்ஞம் முதலிய நற்கருமங்களுக்குப் பயன் படுத்தாமல் பிறரிடம் தநம் பெற்று அவருக்காகப் பாராயணம் செய்வார்கள்.

விரதங்களை விட்டு விராத்யர்களாவர். உப்பு நெய் எண்ணை முதலியவைகளை விற்பார்கள். மது மாம்ஸங்களையும் பிராம்மணர்கள் விற்பார்கள். க்ரூரமான ஸ்வபாவமுள்ளவர்களாகவும் சிற்றின்பம் உணவு இவைகளையே முக்கிய கார்யமென கருதுபவர்களாகவும் பிற ஸ்திரீகளிடம் ஆசை உள்ளவர்களாகவும் மதமுள்ளவர்களாகவும் நான்கு வர்ணத்தவர்களையும் தனித்தனியாக இராமல் ஒன்று சேரும்படிச் செய்பவர்களாகவும் இருப்பார்கள். முந்திய யுகத்திலிருந்ததைப்போல் ஆஜானுபாகுவாய் இல்லாமல் குள்ளமாக இருப்பார்கள். தவறாமல் ஸதா பாபம் செய்வதிலேயே கண்ணும் கருத்துமாக இருப்பார்கள். போக்கிரிகளாகவும் தன் வீட்டை விட்டு மடம் கோயில் முதலியஇடங்களில் வஸிப்பவர்களாகவும் இருப்பார்கள்.

பதினாறு வயதில் கிழத்தனம் வந்து இறப்பார்கள். அதே தீர்க்காயுஸ் ஆகும். அதற்கிடையே இறப்பவர் அல்பாயுஸ் உள்ளவராவர். உடன் பிறந்தவர் பெற்றோர் முதலிய ரத்த ஸம்பந்தமுள்ளவர்களைக் கவனிக்காமல் மைத்துனன் மைத்துனி மாமனார் மாமியார் அவர்களைச் சார்ந்த மற்றவர்கள் ஆகியவர்களை அன்னவஸ்த்ரமளித்து ஆதரிப்பார்கள். நீசர்களுடன் ஸதாஸஹவாஸம் செய்து அவர்களது ஆசாரம் பேச்சு முதலியவைகளைக் கைக்கொள்வார்கள்.

ஸதா விவாதம் கலகம் இவைகளால் மனக்கலக்கத்துடன் இருப்பார்கள். தலைமயிரை அலங்கரித்துக்கொள்வதிலும் புதிது புதிதாக வேஷம் தரிப்பதிலும் பேரவா கொண்டிருப்பார்கள். ஆண்களும் பெண்களும் ஆபரணத்தில் ஆசை கொள்வர். உடல் அலங்காரமே புருஷார்த்தமென கருதுவார்கள்.

கலியுகத்தில் பணம் படைத்தவனே நற்குலத்தில் பிறந்தவனாகக் கருதப்படுவான். வட்டியால் ஜீவிக்கும் பிராம்மணனே பூஜிக்கத்தக்கவன் ஆவான். எல்லாவற்றையும் துறந்த ஸந்யாஸி வீடு மனைவி மக்களிடம் பற்றுக்கொண்டு ஸம்மந்தம் வைத்துக்கொள்வார்கள். கிருஹஸ்தர்களுக்கு உத்தமன் யார்? அதமன் யார்? என பகுத்தறிவு இருக்காது. சிஷ்யர்கள் குருவை அவமதிப்பதுடன் நிந்திப்பார்கள். எல்லோரும் தாம் தாம் தர்மம் செய்வதாகப் பறைசாற்றுவார்கள். ஆனால் சிறிதுகூட தர்மம் செய்யமாட்டார்கள். ஸாதுக்களை வஞ்சிப்பார்கள். துஷ்டர்கள் எல்லோரும் தானம் வாங்கிப் பிழைக்கக் கிளம்பிவிடுவார்கள். பிறர் சொத்தைக்கவருவதில் ஊக்கம் கொள்வர். ஆணும் பெண்ணும் ஆசைப்பட்டால்போதும். அதே விவாஹத்திற்கேற்ற பொருத்தமாகும். ஜாதி குலம் கோத்ரம் பந்துத்வம் பெற்றோர் அனுமதி இவைகளைக் கவனிக்க மாட்டார்கள். துஷ்டனுடன் நட்புக்கொள்வார்கள். துஷ்டருக்கே தானம் செய்வார்கள். திருப்பி ஏதேனும் ஒருவர் தருவதாக இருந்தால் அவருக்கே தானம் செய்வர். சக்தி இல்லாதவர் தான் மிக பொருமை உள்ளவராவர். கண் காது நாக்கு முதலியவைகள் ஶக்தி இழந்தபின் வைராக்யம் தனக்கு ஏற்பட்டதாகக் கூறுவர். உரக்க அர்த்தமில்லாமல் தடபுடலாகப் பேசுபவன் பண்டிதனாவான். யஶஸ்ஸுக்காகவே தர்மத்தைப் பலர் அநுஷ்டிப்பர்.

தநம் நிறைந்தவனை நல்லவன் ஸாது என்பர். அருகிலுள்ள புண்ய தீர்த்தத்தை அலக்ஷயம் செய்து தூரத்திலுள்ள ஸாதாரண தீர்த்தத்தில் ஆசைக்கொள்வர். ப்ராம்மணனுக்கு பூணல் ஒன்றுதான் அடையாளமாக இருக்கும். துறவிக்கு தண்டமொன்றுதான் லக்ஷணம். பூமியில் விளைவு குறையும். நதியில் கறை தானிருக்கும். ஸ்த்ரீகள் பதியினிடம் மநதினால் அன்புவைப்பதைவிட்டு வாக்கினால் வேசிபோல் பேசுவார்கள். பிராம்மணர் எப்போதும் பிறர் அன்னத்திலேயே ஆசை கொள்வர். சண்டாளர் புரோகிதர் ஆவார்கள். பதியை இழந்தஸ்த்ரீ விதவா தர்மத்தைக் கைக்கொள்ளமாட்டாள். தன் இஷ்டப்படி அலங்கரித்துக்கொண்டு திரிவார்கள். மேகம் விசித்திரமாக மழைபொழியும். ஒருதெருவில் மழைபொழியும், அடுத்த தெருவில் மழையிராது. பூமி நன்கு விளையாது.

அரசர் குடிகளைப் பிடுங்கித்தின்பர். வரிபாரம் தாங்காமல் உலகம் துன்புறும். குடிகள் தோளில் மூட்டையை வைத்துக்கொண்டும் கையில் குழந்தையை எடுத்துக்கொண்டும் மிக்க வருத்தத்துடன் கலங்கி மலை குஹை கோரமானக் காடுகளுக்குச் செல்வார்கள். மது மாம்ஸம் கந்தமூலம் முதலியவைகளை ஆஹாரமாகக்கொண்டு ஜீவிப்பார்கள். கலியின் முதல் பாதத்திலேயே இத்தகைய கார்யங்களும் தெய்வ நிந்தையும் நடக்கும். இரண்டாம் பாதத்தில் பகவன் நாமாவே இராது. மூன்ரும் பாதத்தில் வர்ணங்கள் ஒன்ருக கலந்துவிடும். நான்காம் பாதத்தில் ஒரே வர்ணந்தான். பகவத் கதை நற்கருமம் முதலியவைகள் சிறிதுகூட இரா. அத்யயநம் ஸ்வதா ஸவாஹா வௌஷட் ஓங்காரம் முதலியவைகள் அடியோடு அகன்றுவிடும்.

இந்த நிலையைக் கண்டு ஆஹாரமில்லாமல் வருந்திய தேவர்கள் பிரும்மாவை மரணமடைவார்கள். இளைத்தவளும் துக்கமடைந்தவளுமான பூமியை முன்னிட்டுக்கொண்டு வேதத்வநி நிறைந்த பிரும்ம லோகத்தைத் தர்சிப்பார்கள். அங்கு யாக அக்நியின் புகை நிறைந்திருக்கும். சிறந்த முநிவர்கள் கூடியிருப்பர். ஸுவர்ண மயமான வேதியில் ப்ரதக்ஷிணமான ஜ்வாலையுடன் அக்நி ப்ரகாசித்துக்கொண்டிருக்கும். ஒரு பக்கம் யூபமரங்கள், உத்யாநவனம், புஷ்பம் பலம் நிறைந்தமரங்கள், ஸாரஸபக்ஷிகளும் ஹம்ஸங்களும் சப்திக்கும் ஸரஸ்ஸுகள் இவர்களுக்கு

ஸ்வாகதம் கூறுவது போலிருக்கும். காற்றுகளால் அசைக்கப்படும் கொடிகளின் பூங்கொத்துகள் வந்தவரை வணங்கி, ஆங்குள்ள வண்டுகள் சப்தம் வருபவர்களுக்கு ஸ்வாகதம் கூறி அழைப்பதுபோலிருக்கும்.

ப்ரும்மாவின் அரண்மனைக்குச் சென்று தேவர்கள் மிக்க வருத்தத்துடன் தங்கள் குறையை முறையிட ஆரம்பிப்பார்கள். சிறந்த ஆஸனத்தில் அமர்ந்தவரும் ஸநக ஸநந்தன ஸநத்குமாரர் முதலிய ஸித்தர்களால் சூழப்பட்டு வணங்கப்பட்டவருமான ப்ரும்மாவை நமஸ்கரிப்பார்கள். [இதுமுதல் நடக்கப்போகும் கதை நடந்ததாகக் கூறப் படுகிறது.]

பிரும்மாவிடம் உத்தரவுபெற்று எல்லோரும் ஆஸ நத்தில் அமர்ந்தார்கள். கலியின் தோஷத்தால் உண்டான தர்மஹானியைப் பணிவுடன் முறையிட்டார்கள். துக்க முள்ள தேவர்களின் வார்த்தைகளைக்கேட்டு அவர்களை ஸமாதானப் படுத்தினார் பிரும்மா. நான் மஹா விஷ்ணுவைப் ப்ரார்த்தித்து உங்கள் விருப்பத்தைப் பூர்த்தி செய்கிறேன் என்று கூறி வந்த தேவர்களுடன் பிரும்மா கோலோகத்திற்குக் கிளம்பினார். ஆங்குள்ள பகவானை வணங்கி ஸ்தோத்திரம் செய்து தேவர்களது குறைகளைக் கூறி அருள் புரிய வேண்டுமெனப் பிரார்த்தித்தார்.

அதைக்கேட்ட புண்டரீகாக்ஷன் பிரும்மாவைப் பார்த்துக் கூறினார். ஓ பிரும்மன்! உமது விருப்பப்படி நான் ஶம்பள என்றவூரில் விஷ்ணு யஶஸ் என்றவரின் தர்மபத்தினியான ஸுமதி என்பவளிடம் புத்ரனாகத் தோன்றுகிறேன். நான் மூன்று ஸகோதரர்களுடன் கூடி கலியினாலுண்டான துன்பத்தை யகற்றி தர்மத்தை நிலை நாட்டுகிறேன். நீங்களும் உங்களம்ஶத்தால் எனக்கு பந்துக்களாக அவதரியுங்கள்.

என் பிரியையான மஹாலக்ஷ்மி ஸிம்மலதேசத்தில் பிருஹத்ரதன் என்ற அரசனது மஹிஷியான கௌமுதி என்பவளிடம் பெண்ணாகப் பிறப்பாள். பத்மா என்ற அவளையே நான் மணந்து கொள்வேன். நீங்கள் இருப்பிடம் சென்று கூறியபடி பூமியில் அவதரியுங்கள். மரு தேவாபி என்று இரு அரசர்களை உலகில் பிரதிஷ்டை செய்கிறேன். மறுபடியும் கிருதயுகத்தையும் நான்கு பாதங்களுடன் தர்மத்தையும் பூமியில் நிலைநாட்டி விட்டு கோலோகம் செல்வேன் என்றார். இங்ஙனம் பகவான்

கூறியதைக் கேட்டு பிரும்மா ப்ரும்மலோகமும் இந்திராதிகள் ஸ்வர்க்கலோகமும் சென்றனர். அப்படியே அம்ஸாவதாரமாகத் தோன்றினர்கள்.

பகவான் ஸம்பளமென்ற ஊரிலே தான் அவதரிக்க எண்ணம் கொண்டு தனது மஹிமை நிறைந்த அம்ஸத்தை அங்கு அநுப்பினர். விஷ்ணுயஸஸ் எனும் பிராம்மணோத்தமர் மூலமாக ஸுமதியெனும் உத்தமியின் கர்ப்பத்தில் புகுந்தார். அந்த கர்ப்பாதாநம் வைஷ்ணவாம்ஸமானதால் கிரஹம் நக்ஷத்ரம் ராசி எல்லாம் நல்லதாக ஒன்றுகூடி பகவானை ஸேவித்தன. நதி கடல் மலை உலகம் அசை பொருள் அசையாபொருள், ரிஷி தேவர் முதலிய அனைவரும் ஜகத்பதியான ப்ரபு அவதரிக்கிருர் என பரம ஸந்தோஷமடைந்தனர். க்ரமமாக பூச்சூட்டல் ஸீமந்தோந்நயநம் முதலியன செவ்வனே நடந்தன. பத்தாவது மாஸத்திலே வஸந்தருதுவிலே வைகாசி மாதத்திலே சுக்ல பக்ஷ த்வாதசியிலே பகவான் அவதரித்தார். ஆகாயத்தில் துந்துபி மூழங்கிற்று. அப்ஸரஸ்ஸுகள் ஆடினர். கந்தர்வர் காநம் செய்தனர்.

உலகெலாம் பேரானந்த மடைந்தது. பெற்ரோர் அத்புதமான குழந்தையைக்கண்டு அளவில்லா ஆநந்தமடைந்தனர். மஹாஷஷ்டி எனும் தேவி வந்து நாபிக்கொடி அறுத்தாள். கங்காதேவி ஸ்நாநம் செய்வித்தாள். ஸாவித்ரீதேவி குழந்தை உடலைத் துடைத்து விட்டாள். பூதேவி பகவானுக்குப் பாலூட்டினள். கிருஷ்ணவதாரத்தில் நடந்ததுபோல் மாத்ருகா முதலிய தேவீ கணங்கள் வந்து மங்கள வாக்குகளைக் கூறிப் பாடினர். பகவான் அவதரித்ததை அறிந்த பிரும்மா தன்னருகில் பணிவிடை செய்யும் வாயு தேவனை அநுப்பீ பிரஸவ கிருஹத்திலுள்ள பகவானைப் போற்றினர். தேவர்களுக்கும் கிடைக்காத பரம பாவநமான திவ்ய ரூபம் நான்கு கரங்கள் அத்புதமான தேஜஸ் அபாரமான அழகு! இவைகளை மறைத்து ஸாமான்ய பூலோக மனுஷ்ய குழந்தைபோல் இருந்து தேவ கார்யத்தைச் செய்யுங்கள் என வேண்டினர்.

மிக்க வாஸனை நிறைந்த மந்த மாருதத்துடன் திவ்ய தேஹந் தாங்கிய வாயு அங்ஙனமே பகவானை வணங்கி விக்ஞாபநம் செய்துகொண்டார். அந்த விக்ஞாபநத்தைக்

கேட்டவுடன் புண்டரீகாக்ஷனை பகவான் அந்த க்ஷணத்தி லேயே இரு கரங்களுள்ள ஸாமான்ய குழந்தையாக மாறினர். பெற்ரேர் இதைக்கண்டு ஆஶ்சர்யமடைந்தனர். பகவானது மாயையால் அவர் அச்யுதன் பரமாத்மா என்ற தத்வத்தை மறந்து தமக்குப் புத்ரபாக்யம் கிடைத் தது என்று களித்தார்கள்.

மிகச் சிறந்த உத்தம தம்பதிகளான இவர்களுக்குப் புத்ரன் பிறந்ததைக் கண்டு சம்பள க்ராமவாஸிகளனை வரும் ஸந்தோஷமடைந்தனர். அந்நாளை ஒரு பெரும் உத்ஸவமாகக் கொண்டாடினர். பலவகை மங்களங்களைச் செய்து குழந்தையையும் பெற்ரேரையும் போற்றினர். குழந்தையைக் கண்டவுடன் தனது தாபமும் பாபமும் அகன்றதெனக் களித்தனர். ஸுமதி, பகவான் விஷ்ணுவே குழந்தையாக அவதரித்திருக்கிருர்! என்று அறிந்து பரம ஸந்தோஷ மடைந்தாள். உடனே விஷ்ணுயஶஸ் பிராம் மணுேத்தமர்களை அழைத்து எண்ணிறந்த கோ தானம் செய்தார். இந்த அரிய குழந்தைக் கேற்றபடி ஸகல வைதிக கார்யங்களையும் செய்யக்கருதி தந்தை ரிக் யஜுஸ் ஸாம அதர்வ வேதங்களைக் கற்றுணர்ந்த வேதவித்துக் களை அழைத்து விதிப்படி ஜாதகர்மா நாமகர்ணங்களைச் செய்தார். அச்சமயம் பரஶுராமர் வேதவ்யாஸர் கிருபா சார்யர் அஶ்வத்தாமா ஆகியவர்கள் ஸாதாரண பிரும்ம சாரிகள் போல் உருவெடுத்து குழந்தையைக் கண்டு ஸேவிக்க வந்தனர். ஸூர்யனைப் போல் பிரகாசிக்கின்ற இந்நால்வரையும் கண்டு விஷ்ணுயஶஸ் மிக்க ஸந்தோஷம் அடைந்தார். புளகாங்கிதராகி அர்க்ய பாத்யமளித்துப் பூஜித்தார்.

அவர்கள் ஆஸநத்தில் அமர்ந்து ஆதரவுடன் குழந்தை யாகயிருக்கும் பகவானை அணைத்து முத்தமிட்டு உச்சி முகர்ந்து மகிழ்ந்தனர். மநதிலுல் நமஸ்காரம் செய்து போற்றினர். கலியால் வந்த பாபங்களை அகற்றி தர்மத் தைத் தழைக்கும்படிச் செய்யவந்த வைகுண்டநாதன் என அறிந்து போற்றினர். விஷ்ணுயஶஸ் என்ன பெயர் வைப்பதென கேட்கும்பொழுது கலியால்வந்த கல்கத்தைப் (பாபத்தை) போக்க வந்தவர். ஆதலால் கல்கி எனப் பெயர் வைத்தனர். செய்யவேண்டிய நாமகரண அங்க மான ஸகல கிரியைகளையும் செய்து விஷ்ணுயஶஸ்ஸை யும் சிசுவையும் வாழ்த்திச் சென்றனர். ஸுமதியால்

வளர்க்கப்பட்ட கல்கி சுக்லபக்ஷ சந்த்ரனைப்போல் தினம் தினம் வளர்ந்து வந்தார்.

கல்கிக்கு மூத்த ஸஹோதரர்களாக மூவர் தோன்றி யிருந்தனர். கவி பிராக்ஞன் ஸுமந்த்ரன் என்பது அவர் களின் பெயர். அவர்களும் பெற்றோருக்கும் மற்றோருக் கும் அடங்கி கல்வி கேள்விகளிலும் பக்தி க்ஞாநங்களிலும் சிறந்தவர்களாக விளங்கினார்கள். அன்றியும் கல்கியின் அம்ஶமாக தர்மத்தை விருத்தி செய்வதற்காக ஏற்கனவே பலர் பூமியில் அவதரித்தனர். அவர்களில் கார்க்யர் பரக்யர் விஶாலர் என்பவர் மிக முக்யமானவர்கள். பக வானை அநுஸரித்து பந்துக்களாவே தோன்றினர். விஶாக யூபன் என்றோர் அரசனும் பகவானுக்கு முன்னே தோன்றி குடிகளைத் தர்மத்துடன் நியாயமாக பரிபாலநம் செய்துவந் தான். அவனாக்ஷியில் ஸாதுக்கள் அனைவரும் ஸந்தோஷ மடைந்தார்கள். கல்கியும் அவதரித்தபின் கலியால் கஷ்ட மடைந்த பிராம்மணர் அனைவரும் பரம ஸந்தோஷத்துடன் இருந்தார்கள்.

மிக புத்திசாலியாய் கேட்டவுடன் வேதம் ஶாஸ்த்ரம் முதலியவைகளை நன்குணர்ந்து ஓதி பொருள் கூறும் குழந்தைக் கல்கியைக் கண்டு பேரானந்தம் பெற்றார் பெற்றோர். குழந்தாய் ஸகல நற்குணங்களுக்கும் பிறப் பிடமான உனக்கு பிரும்ம ஸம்ஸ்காரம் செய்து யக்ஞ ஸூத்ரமெனும் பூணலையும் போடுகிறேன். ஸாவித்திரி யையும் உபதேசிக்கிறேன். பிறகு நீ வேத மோதலாம் என்று கூறினர். இதைக் கேட்டு கல்கி தந்தையே! வேத மென்றால் என்ன? ஸாவித்ரி என்றால் யாது? பிரும்ம ஸூத்ரமென்பதென்ன? அதைத்தரிப்பதன் பயனென்ன? அதன் தத்வமென்ன? இவைகளை விரிவாகக் கூறுங்கள் என்றார்.

விஷ்ணு யஶஸ் கூறினர். வத்ஸ! வேத மென்பது மஹா விஷ்ணுவின் வாக்கு. வேதமாதா ஸாவித்ரீ எனப் படுவாள். நூலை மூன்றுபிரியாக மடித்துத் திரித்து மூன்று இழைகளாகத் தரித்துக்கொள்வது பிரும்ம ஸூத்ரமெனப் படும். பத்து வகை ஸம்ஸ்காரமுள்ள பிராம்மணர் வேத மோதி ப்ரும்மக்ஞானிகளாவர். மூன்று லோகங்களையும் வேதத்தால் புஷ்டியடையும் படி செய்கிறவர் பிராம்ம ணர்கள்.

